# العقيدة الإسلامية

## من الكتاب والسنة الصحيحة

# இஸ்லாமிய கொள்கை

## குர்ஆன் மற்றும் ஆதாரப்பூர்வமான சுன்னாஹ்வின் அடிப்படையில்


**إعداد: محمد بن جميل زينو**

**ஆசிரியர்: ஷைக் முஹம்மது பின் ஜமீல் ஜைனு**

தமிழாக்கம்: தாருத் தர்பியா

மேற்பார்வை: முஹம்மது மன்சூர் உமரி

**இஸ்லாமிய கொள்கை**

*குர்ஆன் மற்றும் ஆதாரப்பூர்வமான சுன்னாஹ்வின் அடிப்படையில்*

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | ஷைக் முஹம்மது பின் ஜமீல் ஜைனு |
| தமிழாக்கம் | : | தாருத் தர்பியா |
| மேற்பார்வை | : | முஹம்மது மன்சூர் உமரி |
| முதல் அச்சு | : | ஜுன் 2022 / ذو القعدة، ١٤٤٣ه |
| அச்சுக்கோர்வை & வடிவமைப்பு | : | A S கிரா∴பிக்ஸ், சென்னை – 98841 43394 |
| அச்சிட்டோர் | : | படேல் கிரா∴பிக்ஸ், சென்னை – 600 006<br>97109 35721 |
| வெளியீடு | : | தாருத்தர்பியா<br>(பெண்கள் மற்றும் சிறுவர்களுக்கான<br>இஸ்லாமியக் கல்வி மையம்)<br>49/1, தானா தெரு, புரசைவாக்கம்,<br>சென்னை – 600 007<br>9087289479 |

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

# தாருத்தர்பியா ஓர் அறிமுகம்

**தாருத்தர்பியா 2001-ல் நிறுவப்பட்டது.**

**அதன் நோக்கம்:**

- மார்க்கத்தை அதன் மூலத்திலிருந்து பரப்புவது அதாவது, அஸ்ஸலஃபுஸ் ஸாலிஹீன்கள் அறிந்து கொண்ட விதத்தில் குர்’ஆன் மற்றும் சுன்னாவை அறிதல்.
- ஷிர்க் (இணைவைப்பு), மற்றும் பித்அத் (மார்க்கத்தில் இல்லாத நூதன அனாச்சாரங்கள்) பற்றி எச்சரித்தல்.
- முஸ்லிம்களுக்கிடையே உண்மையான சகோதரத்துவத்தை ஏற்படுத்துதல்.
- இஸ்லாம் மற்றும் முஸ்லிம்கள் பற்றிய தவறான கருத்துக்களை களைதல்.
- தாருத்தர்பியா மையம் ஷேக் அனீஸுர் ரஹ்மான் ஆஸமி மதனி حفظه الله மற்றும் ஷேக் முபாரக் மதனி حفظه الله அவர்களின் வழிகாட்டுதலின்படி, ஒரு முஸ்லிம் பெண்ணின் வாழ்கைக்கு தேவையான இஸ்லாமிய கல்வியை தர்பியா அடிப்படையில் அளிக்கிறது.

*அல்லாஹ்வின் அருளால் 2009-ல் எங்களுடைய அறக்கட்டளை உருவாக்கப்பட்டு பதிவு செய்யப்பட்டது.*

**எங்களுடைய செயல்பாடுகள்:**

**குர்ஆன் வகுப்புகள்**

- எங்களுடைய சில தஜ்வீத் ஆசிரியைகள் ஜித்தாவில் உள்ள

அல்ஃபுர்கான் நிறுவனத்தின் சான்றிதழ் பெற்றவர்கள், சில ஆசிரியைகள் முகத்திமத்துல் ஜஸரியாவில் இஜாஸா பெற்றவர்கள்.

- எங்களுடைய ஆசிரியைகளுக்கு காயிதா நூரானியாவைக் கற்றுத்தருவதற்கான பயிற்சியை நாங்கள் அளிக்கிறோம்.
- பெண்கள் மற்றும் குழந்தைகளுக்கு தஜ்வீத் மற்றும் திலாவா வகுப்புகள் நேரடியாகவும், ஆன்லைன் மூலமாகவும் நடைபெறுகின்றன.
- குர்ஆன் மனன வகுப்புகள் நேரடியாகவும், ஆன்லைன் மூலமாகவும் நடைபெறுகின்றன.

## நேரடியாக நடைப்பெறும் வகுப்புகள்.

### டிப்ளோமா வகுப்புகள்.

- இஸ்லாமிய கல்வியில் டிப்ளோமா படிப்பு, வாரத்தில் நான்கு நாட்கள் நடைபெறுகிறது.
- தாய்மார்கள் அவர்களுடைய கடமையான வீட்டு பொறுப்புகளை, வேலைகளையும் நிறைவேற்றியப் பிறகு வகுப்புகளில் கலந்து கொள்ளும் வகையில் காலையிலும் மாலையிலும் அவர்களுக்கு ஏற்ற நேரங்களில் வகுப்புகள் நடைபெறுகிறது.

### உலமாக்களின் வகுப்புகள்.

- ஷேக் அனீஸுர் ரஹ்மான் ஆஸமி மதனி حفظه الله அவர்களின் வகுப்பு, மாதம் ஒருமுறை 'குடும்பத்திற்கான தர்பியா' என்ற தலைப்பில் குடும்பத்தில் உள்ள (ஆண்கள்,

பெண்கள், குழந்தைகள்) அனைவரும் கலந்து கொள்ளும் வகையில் நடைபெறுகிறது.

- ஷேக் ஸலாமுல்லாஹ் حفظه الله அவர்களுடைய வகுப்பு வாரநாட்களில் மாலையில் நடைபெறுகின்றது.

**அல்-ஹிதாயா தாஃவா பயிற்சி.**

- பல்வேறு நிறுவனங்களைச் சார்ந்த பெண் அழைப்பாளர்களை சரியான அகீதா மற்றும் மன்ஹஜ் (வழிமுறை) அடிப்படையில் ஒன்றிணைக்க எங்களுடைய இடைவிடாத முயற்சியில் இப்பயிற்சி அளிக்கப்படுகிறது.

**பருவ வயது (Teenage) மாணவர்களுக்கான பிரத்யேக வகுப்புகள்.**

- மாணவ மாணவிகளின் வசதிக்கேற்ப வார இறுதி நாட்களில் அல்இஸ்லாஹ் (ஆண்கள்) மற்றும் அல்இஸ்லாஹ் (பெண்கள்) வகுப்புகள் நடைபெறுகிறது.

**குழந்தைகளுக்கான பிரத்யேக வகுப்புகள்.**

- தஜ்வீத் , ஹிஃப்ஸ், துஆ , மார்க்கக் கல்வி வகுப்புகள் வார நாட்களில் மாலையில் நடைபெறுகிறது.

**ஆன்லைன் வகுப்புகள்**

- முன்மாதிரி முஸ்லிம் பெண்கள் குழுமம் என்ற மூன்று வருடத்திற்கானஆன்லைன் வகுப்பு பல்லாயிரக்கணக்கான சகோதரிகளுக்கு டெலிகிராம் மூலம் நடைபெறுகிறது.
- ஷேக் முபாரக் மதனி அவர்களின் ஆண்கள் மற்றும் பெண்களுக்கான ஸூம் வகுப்பு வாரம் இரண்டு நாட்கள் நடைபெறுகிறது.

- ஷேக் ஸலாமுல்லாஹ் அவர்களின் ஆண்கள் மற்றும் பெண்களுக்கான தவ்ரா வகுப்புகள் நடைபெறுகிறது.
- மக்கத்துல் முகர்ரமாவின் உம்முல் குரா பல்கலைக்கழத்தில் பயின்ற ஆசிரியரால் ஆரம்ப நிலை அரபி மொழி வகுப்புகள் அரபி மொழியில் நடத்தப்படுகிறது.
- ஆன்லைன் டிப்ளமோ வகுப்புகள்.
- இளம்வயது பெண்களுக்காக பிரத்யேக வகுப்புகள்.
- பெண்களுக்கான தர்பியா வகுப்புகள்.
- அஸ்மாஉல் ஹுஸ்னா வகுப்புகள்.

**தாருத்தர்பியாவுடைய சிறப்பு அம்சங்கள்**

- சில கல்லூரிகளின் வேண்டுகோளின் படி அங்குள்ள மாணவிகள் தாருத்தர்பியாவிற்கு வருகை தரும்போது அவர்களுக்கான சிறப்பு தர்பியா வகுப்புகள் நடத்தப்படுகிறது.
- நிக்காஹ் மற்றும் நிக்காஹ்வில் உள்ள பிரச்சினைகள், குடும்ப பிரச்சினைகள், இளம் வயது ஆண்கள் மற்றும் பெண்களிடையே உள்ள பிரச்சனைகள் அனைத்திற்கும் கவுன்சிலிங் தரப்படுகிறது.
- ரமலான் மாதத்தில் இல்யூம் அகாடமியிலிருந்து அரிசி மற்றும் மளிகை பொருட்கள் கொடுக்கப்படும், அதை தேவை உள்ளவர்கள் யார் என்று கண்டறிந்து விசாரித்து, அவர்களிடம் ஒப்படைக்கும் பணியில் தாருத்தர்பியா ஈடுபடுகிறது.
- தாருத்தர்பியா நூலகத்தில் பல மொழிகளில் (ஆங்கிலம், தமிழ், உருது, அரபி) பயனுள்ள புத்தகங்கள் இருக்கிறது.

- மக்களிடமிருந்து வரக்கூடிய ஸகாத் பணத்தைப் பெற்று, அதற்கு தகுதியானவர்களை முறையாக விசாரித்து அந்த ஸகாத் பணத்தை அவர்களிடம் கொண்டு போய் சேர்க்கும் பணி நடைபெறுகிறது.
- இஸ்லாத்திற்கு புதிதாக வந்த பெண்கள் ஈத் பெருநாளை சிறப்பாக கொண்டாடுவதற்காக சில சிறப்பு ஏற்பாடுகளும் முயற்சிகளும் செய்யப்படுகிறது.
- ஹஜ் மற்றும் உம்ரா செல்பவர்களுக்காக ஆலிம்களின் மூலம் ஆண்கள் மற்றும் பெண்களுக்கான சிறப்பு வகுப்புகள் நடைபெறுகிறது.
- பல்வேறு தலைப்புகளில் குர்ஆன் மற்றும் ஹதீஸ் ஆதாரங்களின் அடிப்படையில் கண்காட்சிகள் நடைபெறுகிறது.
- சுன்னாவின் முறையில் உளூ, குஸூல், தொழுகை, ஜனாஸா குளிப்பாட்டுதல் , கஃபனிடுதல் போன்ற செய்முறை வகுப்புகளும் நடைபெறுகிறது.
- சென்னை மற்றும் சென்னையை சுற்றியுள்ள பகுதிகளிலிருந்து தாஃவா செய்வதற்கான வேண்டுகோள் வந்தால், தாருத்தர்பியாவில் உள்ள சகோதரிகள் அங்கு சென்று தாஃவா செய்கிறார்கள்.

*தாருத்தர்பியாவின் இந்த பணிகள் சிறப்பாக நடைபெற அல்லாஹ்வின் பொருத்தம் நாடி உங்களுடைய பொருளாதார உதவிகளை தந்து உதவுங்கள்*

உங்களுடைய மறுமைக்கான முதலீடாக, ஸதகத்துல் ஜாரியாவை சம்பாதிக்க நேரடியாகவோ அல்லது கீழ் கொடுக்கப்பட்டிருக்கும்

எங்கள் வங்கிக் கணக்கிற்கோ உங்கள் நன்கொடைகளை அளித்து ஆதரவளிக்கும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

"*எவர்கள் தங்கள் பொருள்களை அல்லாஹ்வுடைய பாதையில் செலவு செய்து (அப்பொருளை வாங்கியவனுக்குத்) தாங்கள் அதைக் கொடுத்ததற்காக இகழ்ச்சியையும், துன்பத்தையும் (அதனோடு) சேர்க்கவில்லையோ அவர்களுக்குரிய கூலி அவர்களின் இறைவனிடம் அவர்களுக்குண்டு. மேலும்,அவர்களுக்கு ஒரு பயமுமில்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்.*" **(அல் குர்ஆன் 2:261)**

**வங்கிக் கணக்கு விவரம்:**

**உங்கள் சதகாவுக்கான வங்கி கணக்கு விபரம்**

**Daar ut Tarbiyyah**

A/c No **: 921010019065394**

IFSC **: UTIB0001915**

Bank **: AXIS Bank**

Branch **: Gopalapuram, Chennai**

Account Type **: Savings Account**

**Gpay** - **73057 92375**

# பொருளடக்கம்

# முன்னுரை

*அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்...*

நிச்சயமாக புகழனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே! அவனை நாம் புகழ்கிறோம், அவனிடத்தில் உதவி தேடுகிறோம், அவனிடமே பாவமன்னிப்பு கோருகிறோம். நம்முடைய மனங்களின் தீமைகளிலிருந்தும் நம்முடைய செயல்களில் தீயவைகளிலிருந்தும் அல்லாஹ்விடமே பாதுகாப்புத் தேடுகிறோம்.

அல்லாஹ் யாருக்கு நேர்வழி காட்டுகிறானோ அவரை வழிகெடுப்பவர் எவருமில்லை. இன்னும், அவன் நேர்வழி செலுத்தாதவருக்கு நேர்வழி காட்டுபவரும் இல்லை.

மேலும் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும், எதுவும் இல்லை. அவன் தனித்தவன் அவனுக்கு இணை இல்லை என்று நான் சாட்சி கூறுகிறேன்.

நிச்சயமாக முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவனின் அடியார் மற்றும் அவனின் தூதர் எனவும் சாட்சி கூறுகிறேன்.

தவ்ஹீத் எனும் ஏகத்துவ அகீதா கொள்கை மனிதனின் இம்மை மற்றும் மறுமையின் வெற்றியின் அடிப்படையாக இருக்கின்றது. இதை கருத்தில் கொண்டே அகீதா குறித்த முக்கியமான விஷயங்களை கேள்வி பதில் வடிவில் குர்ஆன்

மற்றும் சரியான ஹதீஸ ூகளின் ஆதாரங்களுடன் இந்த புத்தகத்தை வடிவமைத்துள்ளேன். வாசகர்கள் நிம்மதியுடன் சரியான மார்க்க விஷயங்களை அறிவதற்காக இவ்வாறு தொகுத்து வழங்கியுள்ளேன்.

அல்லாஹ் முஸ்லிம்களுக்கு இதன் மூலம் பயனளிப்பானாக!!! மேலும் இப்பணியை தூய்மை பொருந்தியதாக அங்கீகரிப்பானாக!!!

*ஆசிரியர்*

**முஹம்மது பின் ஜமீல் ஜைனு**

# 1. இஸ்லாமின் தூண்கள்

**கேள்வி 1: ஜிப்ரில் ﵇ கேட்டார்கள்: "முஹம்மதே இஸ்லாத்தைப் பற்றி எனக்குக் கூறுங்கள்."**

அதற்கு நபி ﷺ அவர்கள் பதிலளித்தார்கள்: இஸ்லாம் என்பது:

1. வணக்கத்திற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை, மேலும் முஹம்மது ﷺ அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (அதாவது: அல்லாஹ் முஹம்மது ﷺ அவர்களை மார்க்கத்தை எத்திவைப்பதற்கு அனுப்பி வைத்தான்) எனவும் சாட்சி கூறுதல்.

2. ஸலாத் எனும் தொழுகையை நிலைநாட்டுதல் - அதாவது அதனை சரியான முறையில், நிதானமாகவும், பணிவுடனும் நிறைவேற்றுதல்.

3. மேலும், ஸகாத்1 (ஏழைவரி) கொடுத்தல்.

4. ஸவ்ம் - ரமலானில் நோன்பு நோற்பது .(நோன்பு நோற்கிறேன் என்று மனதில் எண்ணியவாறு (நிய்யதுடன்) ஃபஜரில் இருந்து சூரியன் மறையும் வரை நோன்பை முறிக்கும் விஷயங்களிலிருந்து விலகியிருத்தல்).

5. (மக்காவிலுள்ள புனித ஆலயமான) அல்லாஹ்வின் இல்லத்திற்கு சென்றுவர ஆற்றல் பெற்றவர்கள் ஹஜ் செய்வது. (மக்காவிற்கு சென்று வருவதற்கான ஆற்றலில் - ஆரோக்கியம் மற்றும் அதற்கு தேவைப்படும் பொருளாதாரம் ஆகியவை அடங்கும்) **(முஸ்லிம்)**

*குறிப்பு1:* (ஆண்டுக்கு ஒரு முறை ஒரு குறிப்பிட்ட நிஸாப் எனும் அளவை அடைந்த பிறகு ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் முஸ்லிம் சமுதாயத்தில் உள்ள ஏழைகளுக்கு ஸகாத் கொடுப்பது முஸ்லிம்களுக்கு கட்டாயக் கடமையாக இருக்கிறது. சமுதாய நீதியை நிலை நாட்டுவதற்கும் மேலும் முஸ்லிம் சமுதாய செழிப்பிற்கும் பாதுகாப்பிற்கும் கொண்டு செல்லக் கூடிய முக்கிய பொருளாதார கருவியாக ஸகாத் அமைகிறது)



## 2. ஈமானின் (இறைநம்பிக்கை) தூண்கள்

**கேள்வி 1: ஜிப்ரில் عليه السلام கேட்டார்கள்: "முஹம்மதே ஈமானைப் பற்றி எனக்குக் கூறுங்கள்."**

நபி ﷺ அவர்கள் பதிலளித்தார்கள்: ஈமான் என்பது நம்பிக்கை கொள்வதாகும்..

1. *அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்வது:*

(அதாவது அவன் தான் படைப்பாளன், அவன் மட்டுமே வணங்குவதற்குத் தகுதியானவன், அவனுக்கு (குர்ஆனிலும், சுன்னாவிலும் குறிப்பிடப்பட்ட) பெயர்களும், தன்மைகளும் இருக்கின்றன என்று நம்பிக்கை கொள்ளவேண்டும்.

﴿لَيۡسَ كَمِثۡلِهِۦ شَيۡءٞۖ وَهُوَ ٱلسَّمِيعُ ٱلۡبَصِيرُ﴾

*அவனைப்போன்று எப்பொருளும் இல்லை; அவன்தான் (யாவற்றையும்) செவியேற்பவன், பார்ப்பவன்.* **(அல் குர்ஆன் 42:11)**

2. *அவனுடைய வானவர்களின் மீது நம்பிக்கை கொள்வது:*

(அதாவது அவர்கள் ஒளியினால் படைக்கப்பட்டவர்கள், அல்லாஹ்வின் கட்டளைகளை அப்படியே நிறைவேற்றக் கூடியவர்கள், அவர்களை நம்மால் பார்க்க முடியாது என்று நம்பிக்கை கொள்ளவேண்டும்).

3. *அவனுடைய வேதங்களின் மீது நம்பிக்கை கொள்வது:*

(தவ்ராத், இஞ்சீல், (za)ஸபூர் மற்றும் இறுதி வேதமாகிய குர்ஆன் ஆகியவை வேதங்களில் சிலதாகும்)

4. *அவனுடைய தூதர்களின் மீது நம்பிக்கை கொள்வது:*

(முதலாமானவர் நூஹ் ﵇ இறுதியானவர் முஹம்மது ﷺ

5. *இறுதிநாளின் மீது நம்பிக்கை கொள்வது:*

(அந்த மறுமை நாளில் மக்கள் விசாரிக்கப்படுவார்கள் என்று நம்பிக்கை கொள்ளவேண்டும்).

6. *நன்மை, தீமை அனைத்தும் அல்லாஹ் விதித்ததன்படியே நடக்கின்றது என்று விதியின் மீது நம்பிக்கை கொள்ளவேண்டும்*

(காரணிகளை மேற்கொண்டவாறு தனக்கு அல்லாஹ் விதித்த விதியை திருப்தி கொள்ளவேண்டும்). **(முஸ்லிம்)**



## ३. அல்லாஹ்விற்கு மனிதர்கள் செய்ய வேண்டிய கடமைகள்

**கேள்வி 1: அல்லாஹ் நம்மை எதற்காக படைத்துள்ளான்?**

*பதில்:* அல்லாஹ் தன்னை மட்டுமே வணங்குவதற்காகவும் அவனைத் தவிர வேறு எவரையும் வணங்காமல் இருப்பதற்காகவுமே நம்மைப் படைத்துள்ளான். அதற்கு ஆதாரம், அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَمَا خَلَقْتُ ٱلْجِنَّ وَٱلْإِنسَ إِلَّا لِيَعْبُدُونِ﴾

*இன்னும், ஜின்களையும், மனிதர்களையும் அவர்கள் என்னை வணங்குவதற்காகவே யன்றி நான் படைக்கவில்லை.*

**(அல் குர்ஆன் 51:56)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

(حَقُّ اللَّهِ عَلَى الْعِبَادِ أَنْ يَعْبُدُوهُ وَلَا يُشْرِكُوْا بِهِ شَيْئًا) **[متفق عليه]**

“மனிதர்கள் மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை அவனை மட்டுமே வணங்குவதும், அவனுக்கு வேறு எதையும் இணையாக்காமல் இருப்பதும் ஆகும்.” **(புகாரி, முஸ்லிம்)**

**கேள்வி 2: இபாதத் (வணக்கம்) என்றால் என்ன?**

*பதில்:* அல்லாஹ் விரும்பக்ககூடிய உள்ளார்ந்த மற்றும் வெளிப்படையான அனைத்து சொற்களையும், செயல்களையும் உள்ளடக்கிய ஒரு விரிவான சொல்லுக்கு இபாதத் (வணக்கம்) என்று கூறப்படும்.

துஆ, தொழுகை, உள்ளச்சம் போன்றவை வணக்கத்தில் அடங்கும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿قُلۡ إِنَّ صَلَاتِي وَنُسُكِي وَمَحۡيَايَ وَمَمَاتِي لِلَّهِ رَبِّ ٱلۡعَٰلَمِينَ﴾

*நீர்கூறும்: "மெய்யாக என்னுடைய தொழுகையும், என்னுடைய குர்பானியும், என்னுடைய வாழ்வும், என்னுடைய மரணமும் எல்லாமே அகிலங்களின் (மனிதர்கள், ஜின்கள் மற்றும் வசிக்கக்கூடிய அனைத்தும்) இறைவனாகிய அல்லாஹ்வுக்கே சொந்தமாகும்." (அல் குர்ஆன் 6:162).*

நபி ﷺ கூறினார்கள்: அல்லாஹ் கூறுவதாக,

(وَمَا تَقَرَّبَ إِلَيَّ عَبْدِي بِشَيْءٍ أَحَبَّ إِلَيَّ مِمَّا افْتَرَضْتُ عَلَيْهِ) **[حديث قدسي رواه البخاري]**

"என் அடியான் என்னை நெருங்குவதற்காக செய்பவற்றில், எனக்கு மிகவும் பிரியமானது, நான் அவன் மீது எதைக் கடமையாக்கி இருக்கிறேனோ அது." **(புகாரி)**

## கேள்வி 3: அல்லாஹ்வை நாம் எப்படி வணங்குவது?

*பதில்:* அல்லாஹ்வும், அவனுடைய தூதர் முஹம்மது ﷺ அவர்களும் கட்டளையிட்டவாறு அல்லாஹ்வை வணங்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்:

﴿يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓاْ أَطِيعُواْ ٱللَّهَ وَأَطِيعُواْ ٱلرَّسُولَ وَلَا تُبۡطِلُوٓاْ أَعۡمَٰلَكُمۡ﴾

*ஈமான் கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ்வை கீழ்ப்படியுங்கள், அவனுடைய தூதருக்கு கீழ்ப்படியுங்கள்.(அவர்களுக்கு மாறு செய்து) உங்கள் நன்மைகளை நீங்கள் வீணாக்கி விடாதீர்கள்.*

**(அல் குர்ஆன் 47:33)**

நபி ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள்:

مَنْ عَمِلَ عَمَلًا لَيْسَ عَلَيْهِ أَمْرُنَا فَهُوَ رَدٌّ" (أَيْ غَيرُ مَقْبُوْلٍ) **[رواه مسلم]**

“அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்:

நம்முடைய இந்த (மார்க்க) விஷயத்தில், அதில் இல்லாத ஒன்றை யார் புதிதாக புகுத்துகின்றாரோ அது(அந்த புதுமை) நிராகரிக்கப்பட்டதாகும். இதை ஆயிஷா ரழி அவர்கள் அறிவிக்கிறார்கள்.” **(முஸ்லிம்)**

**கேள்வி 4: நாம் அல்லாஹ்வை அச்சத்துடனும், எதிர்பார்ப்புடனும் வணங்க வேண்டுமா?**

*பதில்:* ஆம். அவ்வாறே அல்லாஹ்வை (தண்டனையை குறித்த) அச்சத்துடனும் நன்மைகளை எதிர்பார்த்தும் வணங்கிட வேண்டும்.

அல்லாஹ் தனது அடியார்களுக்கு இவ்வாறு கட்டளையிடுகிறான்:

﴿وَٱدۡعُوهُ خَوۡفٗا وَطَمَعًا﴾

“.... *அச்சத்தோடும் ஆசையோடும் அவனை அழையுங்கள்......*”

**(அல் குர்ஆன் 7:56)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: (அபூதாவூது)

" أَسْأَلُ اللهَ الجَنَّةَ، وَأَعُوْذُ بِهِ مِنَ النَّارِ". **[رواه أبو داود بسند صحيح]**

“நான் அல்லாஹ்விடம் எனக்கு சுவனத்தை அளிக்கும்படி வேண்டுகிறேன், மேலும் அவனிடம் நரக நெருப்பிலிருந்து பாதுகாவல் தேடுகிறேன்.”

**கேள்வி 5: வணக்கத்தில் இஹ்ஸான் (அழகியமுறையில் செயலாற்றல்) என்றால் என்ன?**

*பதில்:* அல்லாஹ் தன்னை கண்காணிக்கின்றான் என்ற உணர்வோடு அவனை வணங்குவதாகும். அல்லாஹ் கூறுகிறான்:

﴿ٱلَّذِى يَرَىٰكَ حِينَ تَقُومُ ۝ وَتَقَلُّبَكَ فِى ٱلسَّٰجِدِينَ﴾

"*அவன், (முஹம்மதே) நீர் நிற்கும்போது, உம்மைப் பார்க்கிறான். இன்னும், ஸஜ்தா செய்வோருடன் நீர் இயங்குவதையும் (அவன் பார்க்கிறான்)* **(அல் குர்ஆன் 26: 218 - 219)**

மேலும் நபி ﷺ கூறினார்கள்:

"الْإِحْسَانُ أَنْ تَعْبُدَ اللَّهَ كَأَنَّكَ تَرَاهُ فَإِنْ لَمْ تَكُنْ تَرَاهُ فَإِنَّهُ يَرَاكَ" **[رواه مسلم]**

இஹ்ஸான் என்பது அல்லாஹ்வை காண்பதைப் போன்று நீர் அவனை வணங்குவதாகும், அவ்வாறு நீர் அவனைப் பார்க்கவிட்டாலும் நிச்சயமாக அவன் உன்னை பார்க்கின்றான் என்றவாறு வணங்குவதாகும். **(முஸ்லிம்)**

### கேள்வி 6: இபாதத்தின் வகைகளை குறிப்பிடவும்?

*பதில்:* இபாதத் பலவகைப்படும். அவைகளில்: துஆ, அல்லாஹ்வை அஞ்சுவது, அவன் மீது ஆதரவு வைப்பது, தவக்குல் எனும் இறைவனையே சார்ந்து இருப்பது, தண்டனைகளுக்கு அஞ்சுவது, நன்மைகளின் பால் ஆசைக் கொள்வது, அறுத்து பலியிடுவது, நேர்ச்சை புரிவது, தொழுகை, நோன்பு, தவாப், அல்லாஹ்வின் மீது சத்தியம் புரிவது போன்றவையாகும்.



## 4. தவ்ஹீதின் வகைகளும், பயன்களும்

**கேள்வி 1:** அல்லாஹ் நபிமார்களை எதற்காக அனுப்பினான்?

*பதில்:* அல்லாஹ் நபிமார்களை தன்னை வணங்கும்படி மக்களை அழைப்பதற்காகவும், தன்னைத் தவிர மற்ற எதையும் வணங்குவதை விட்டு தடுப்பதற்காகவும் அவர்களை அனுப்பினான்.

﴿وَلَقَدْ بَعَثْنَا فِى كُلِّ أُمَّةٍ رَّسُولًا أَنِ ٱعْبُدُوا۟ ٱللَّهَ وَٱجْتَنِبُوا۟ ٱلطَّٰغُوتَ﴾

*அல்லாஹ் கூறுகிறான்: "மெய்யாக நாம் ஒவ்வொரு சமுகத்தாரிடத்திலும் "அல்லாஹ்வையே நீங்கள் வணங்குங்கள்" ஷைத்தான்களை விட்டும் நீங்கள் விலகிச் செல்லுங்கள் என்று போதிக்குமாறு நம் தூதரை அனுப்பி வைத்தோம்....."*

**(அல் குர்ஆன் 16:36)**

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்:

(وَالْأَنْبِيَاءُ إِخْوَةٌ لِعَلَّاتٍ، أُمَّهَاتُهُمْ شَتَّى وَدِينُهُمْ وَاحِدٌ) **[متفق عليه]**

"நபிமார்கள் ஒரே தந்தையின் பிள்ளைகளான சகோதரர்கள் ஆவர் ...... அவர்களின் மார்க்கம் ஒன்றே." **(புகாரி, முஸ்லிம்)**

அதாவது அவர்களின் அடிப்படை நம்பிக்கை ஒன்றாகும். ஆனால், ஷரியத் எனும் மார்க்க சட்டங்கள் மாறுப்படும்.

**கேள்வி 2:** 'தவ்ஹீதுர் ருபூபிய்யா' என்றால் என்ன?

*பதில்:* அல்லாஹ்வை அவனது செயல்களான படைத்தல்,

நிர்வகித்தல், வாழ்வாதாரம் அளித்தல் போன்றவற்றில் ஒருமைப்படுத்துவது (அதாவது இந்த ஆற்றல்கள் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே உண்டு, இதில் அவனுக்கு எந்த இணையுமில்லை என்று உறுதியாக நம்புவது) தவ்ஹீதுர் ருபூபிய்யாவாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿ٱلْحَمْدُ لِلَّهِ رَبِّ ٱلْعَٰلَمِينَ﴾

*“அனைத்து புகழும், அகிலங்கள் எல்லாவற்றையும் படைத்து வளர்த்துப் பரிபக்குவப்படுத்தும் அல்லாஹ்வுக்கே ஆகும்.* **(அல் குர்ஆன் 1:1)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

(اَللَّهُمَّ لَكَ الْحَمْدُ أَنْتَ رَبُّ السَّمَوَاتِ وَالْأَرْضِ) **[متفق عليه]**

“அல்லாஹ்வே! உனக்கே புகழனைத்தும், நீயே வானங்கள் மற்றும் பூமியின் அதிபதி (ரப்)………” **(புகாரி, முஸ்லிம்)**

**கேள்வி 3: 'தவ்ஹீதுல் உலூஹிய்யா' என்றால் என்ன?**

பதில்: துஆ, பலியிடுதல், நேர்ச்சை, தொழுகை, ஆதரவு வைத்தல், அஞ்சுதல், உதவிதேடுதல், பொறுப்பு சாட்டுதல் போன்ற (உள்ரங்கமான வெளிரங்கமான அனைத்து) வணக்க வழிபாடுகளில் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவது (அதாவது வணக்க வழிபாடுகளின் அனைத்து வகைகளையும் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே நிறைவேற்றுவது) தவ்ஹீதுல் உலூஹிய்யாவாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿وَإِلَٰهُكُمْ إِلَٰهٌ وَٰحِدٌ لَّآ إِلَٰهَ إِلَّا هُوَ ٱلرَّحْمَٰنُ ٱلرَّحِيمُ﴾

“*(மனிதர்களே!) உங்கள் வணக்கத்திற்குத் தகுதியானவன் ஒரேயொரு இறைவனே ஆவான். அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையவனுமாகிய அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு எவனுமில்லை.*” **(அல் குர்ஆன் 2:163)**

நபி ﷺ அவர்கள் முஆத் இப்னு ஜபல் ؓ அவர்களை யமன் நாட்டுக்கு அனுப்பியபோது அவர்களிடம் கூறினார்கள்,

"فَلْيَكُنْ أَوَّلَ مَا تَدْعُوهُمْ إِلَيْهِ شَهَادَةُ أَنْ لَا إِلَهَ إِلَّا اللَّهُ". **[متفق عليه]**

“எனவே, அவர்களுக்கு முதலாவதாக, வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று சாட்சி சொல்லும் படி அவர்களை அழைப்பீராக! **(புகாரி, முஸ்லிம்)**

وفي رواية البخاري: "إِلَى أَنْ يُوَحِّدُوا اللَّهَ"

மேலும், புகாரியில் உள்ள மற்றொரு அறிவிப்பில், "அல்லாஹ் ஒருவன் எனும் ஏக இறைக் கொள்கையை ஏற்கும்படி அழைப்புக் கொடுங்கள்” என்று வந்துள்ளது.

**கேள்வி 4: “லா இலாஹா இல்லல்லாஹ்” வின் பொருள் என்ன ?**

“*லா இலாஹா இல்லல்லாஹ்*” வின் பொருளாவது அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்கு தகுதியானவன் வேறு யாரும் கிடையாது என்பதாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿ذٰلِكَ بِاَنَّ اللّٰهَ هُوَ الْحَقُّ وَاَنَّ مَا يَدْعُوْنَ مِنْ دُوْنِهٖ هُوَ الْبَاطِلُ﴾

*நிச்சயமாக அல்லாஹ்தான் உண்மையானவன். நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வையன்றி அழைப்பவையாவும் பொய்யானவை ஆகும்* **(அல் குர்ஆன் 22:62)**

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்:

யார் “லா இலாஹா இல்லல்லாஹ்” அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்கு தகுதியானவன் வேறு யாரும் கிடையாது என்று கூறி, அல்லாஹ்வை விடுத்து வழிபாடு செய்யப்படுபவற்றை நிராகரிக்கிறாரோ அவரது உடைமையும் உயிரும் அபயம் பெற்றுவிடும். (முஸ்லிம்)

**கேள்வி 5: 'தவ்ஹீதுல் அஸ்மா வஸ்ஸிபாத் என்றால் என்ன?**

*பதில்:* அல்லாஹ் தனது புத்தகத்தில் தன்னைக் குறித்து எப்படி வர்ணித்துள்ளானோ, மேலும் அல்லாஹ்வை குறித்து அவனது தூதர் தனது ஆதரப்பூர்வமான ஹதீஸுகளில் எப்படி வர்ணித்துள்ளார்களோ அவற்றை எவ்வித ஒப்பு உவமையின்றியும், மறுத்தல் திரித்தலின்றியும் அப்படியே உறுதிப்படுத்த வேண்டும்.

(எ.கா) அல்லாஹ் அவனுடைய கண்ணியத்திற்கு தகுந்தவாறு அர்ஷின் மீது இருக்கின்றான், அவன் கீழ்வானத்திற்கு வருகைத் தருகின்றான், அவனுக்கு கரங்கள் உண்டு போன்றவற்றை எவ்வித ஒப்பு உவமையின்றி, மறுத்தல் திரித்தலின்றி அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்:

﴿لَيۡسَ كَمِثۡلِهِۦ شَيۡءٞۖ وَهُوَ ٱلسَّمِيعُ ٱلۡبَصِيرُ﴾

*அவனைப் போன்று எப்பொருளும் இல்லை; அவன் தான் (யாவற்றையும்) செவியேற்பவன், பார்ப்பவன்.* **(அல் குர்ஆன் 42:11)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்,

"يَنْزِلُ اللَّهُ فِي كُلِّ لَيْلَةٍ إِلَى السَّمَاءِ الدُّنْيَا". **[رواه أحمد]**

“அல்லாஹ் ஒவ்வொரு இரவிலும் முதல்வானத்திற்கு இறங்குகிறான்.” **(அஹ்மது)**

(அதாவது, தன்னுடைய கண்ணியத்திற்கும், மகத்துவத்துக்கும் தகுந்தவாறு, அவனுடைய படைப்புகள் எவற்றின் செயல்களுக்கும் ஒப்பிடாத வகையில் அவன் இறங்குகிறான்).

**கேள்வி 6: அல்லாஹ் எங்கே இருக்கின்றான்?**

*பதில்:* அல்லாஹ் தன்னுடைய அர்ஷின் மீது (தன் மகிமைக்கு தக்கவாறு) ஏழு வானத்திற்கு மேல் இருக்கின்றான்.

﴿ٱلرَّحۡمَٰنُ عَلَى ٱلۡعَرۡشِ ٱسۡتَوَىٰ﴾

*அளவற்ற அருளாளன் அர்ஷின் (அவனுடைய கண்ணியத்திற்க்கு தகுந்த வகையில் மகத்தான அர்ஷின்) மீது உயர்ந்திருக்கிறான்* **(அல் குர்ஆன் 20:5)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

"إِنَّ اللَّهَ كَتَبَ كِتَابًا قَبْلَ أَنْ يَخْلُقَ الْخَلْقَ إِنَّ رَحْمَتِي سَبَقَتْ غَضَبِي فَهُوَ مَكْتُوبٌ عِنْدَهُ فَوْقَ الْعَرْشِ" **[متفق عليه]**

“அல்லாஹ் படைப்புகளை படைப்பதற்கு முன்பாக விதியொன்றை எழுதிக்கொண்டான். 'என் கருணை என் கோபத்தை முந்திவிட்டது' என்பது தான் அந்த விதி. அது அவனிடமுள்ள அரியாசனத்திற்கு மேலேயே எழுதப்பட்டுள்ளது”. **(புகாரி, முஸ்லிம்)**

**கேள்வி 7: அல்லாஹ் நம்முடன் இருக்கின்றானா?**

*பதில்:* அல்லாஹ் (அர்ஷின் மீது உயர்ந்திருப்பதுடன்) தன்னுடைய அறிவாலும், பார்ப்பது, கேட்பது, நம் நிலைகளை அறிவது போன்ற தன்மைகளால் நம்முடன் இருக்கின்றான்.

﴿قَالَ لَا تَخَافَآ إِنَّنِى مَعَكُمَآ أَسۡمَعُ وَأَرَىٰ﴾

*(அதற்கு அல்லாஹ்) "நீங்களிருவரும் அஞ்சவேண்டாம்; நிச்சயமாகநான் (யாவற்றையும்) செவியேற்பவனாகவும், பார்ப்பவனாகவும் உங்களிருவருடனும் இருக்கிறேன்" என்று கூறினான்.* **(அல் குர்ஆன் 20:46)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

"إِنَّكُمْ تَدْعُونَ سَمِيعًا قَرِيبًا وَهُوَ مَعَكُمْ" (أَيْ بِعِلْمِهِ). **[رواه مسلم]**

"................கேட்பவனும், அருகிலிருப்பவனும், உங்களுடன் (தன்னுடைய அறிவால்) இருப்பவனை நீங்கள் அழைக்கின்றீர்கள்." **(முஸ்லிம்)**

**கேள்வி 8: தவ்ஹீத் எனும் ஏகத்துவத்தின் பலன்கள் என்ன?**

*பதில்:* மறுமையின் நிரந்தரமான வேதனையிலிருந்து பாதுகாப்பு, இம்மையில் சரியான வழிகாட்டுதல் மற்றும் பாவமன்னிப்பு போன்றவை தவ்ஹீத் எனும் ஏகத்துவத்தின் பலன்களாக இருக்கின்றது.

எல்லாம் வல்ல அல்லாஹ் கூறுகிறான்:

﴿ٱلَّذِينَ ءَامَنُواْ وَلَمۡ يَلۡبِسُوٓاْ إِيمَٰنَهُم بِظُلۡمٍ أُوْلَٰٓئِكَ لَهُمُ ٱلۡأَمۡنُ وَهُم مُّهۡتَدُونَ﴾

*எவர்கள் ஈமான் கொண்டு அதன் பின்னர் தங்களுடைய ஈமானை (இணைவைத்தல் என்னும்) அநீதியைக் கொண்டு கலந்துவிடவில்லையோ அவர்களுக்கே நிச்சயமாக பாதுகாப்பு உண்டு. அவர்கள்தான் நேரான வழியிலும் இருக்கின்றனர்'*

**(அல் குர்ஆன் 6:82)**

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், "

"حَقُّ الْعِبَادِ عَلَى اللَّهِ أَنْ لَا يُعَذِّبَ مَنْ لَا يُشْرِكُ بِهِ شَيْئًا" **[متفق عليه]**

...அல்லாஹ்வின் மீது அடியார்களுக்குள்ள உரிமை என்னவென்றால், அவனுக்கு எதையும் இணைவைக்காமல் இருப்பவரை (மறுமையில்) அவன் தண்டிக்காமல் இருப்பதாகும்" என்று கூறினார்கள். **(புகாரி, முஸ்லிம்)**



## 5. அமல்கள் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கான நிபந்தனைகள்

**கேள்வி 1: அமல்கள் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கான நிபந்தனைகள் என்ன?**

*பதில்:* அமல்கள் அல்லாஹ்விடத்தில் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு மூன்று நிபந்தனைகள் உள்ளது. அவை:

**1. ஈமான்:** அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டு அவனுடைய ஏகத்துவத்தை உறுதிப்படுத்துவது.

அல்லாஹ் தன் திருமறையில் நம்பிக்கை கொள்ளாத இறைமறுப்பாளர்களின் செயல்களை குறித்து இவ்வாறு கூறுகிறான்:

﴿وَقَدِمْنَآ إِلَىٰ مَا عَمِلُواْ مِنْ عَمَلٍ فَجَعَلْنَٰهُ هَبَآءً مَّنثُورًا﴾

*இன்னும்; நாம் அவர்கள் (இம்மையில்) செய்த செயல்களின் பக்கம் முன்னோக்கி அவற்றை (அவர்கள் உலகில் நம்பிக்கை கொள்ளாததால் நன்மை எதுவும் இல்லாது) பரத்தப் பட்ட புழுதியாக ஆக்கிவிடுவோம்.* **(அல் குர்ஆன் 25:23)**

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள்:

"قُلْ آمَنْتُ بِاللَّهِ ثُمَّ اسْتَقِمْ" **[رواه مسلم]**

“அல்லாஹ்வின் மீது நான் நம்பிக்கை கொண்டேன்" என்று கூறி அதில் நிலைத்திரு” என்று கூறினார்கள்.

நல்லமல் புரியக்கூடியவர் தனது ஈமானுக்கு முரணாக

இருக்கக்கூடிய இறைமறுப்பு மற்றும் வணக்கங்களில் அல்லாஹ்வுக்கு இணைக்கற்பிக்காமல் விலகியிருப்பது ஈமானின் நிபந்தனைகளில் உள்ளவையாக இருக்கின்றது.

﴿وَلَوۡ أَشۡرَكُواْ لَحَبِطَ عَنۡهُم مَّا كَانُواْ يَعۡمَلُونَ﴾

*அவர்கள் இணைவைத்தால் அவர்கள் செய்து கொண்டிருந்த (நன்மையான) காரியங்கள் அனைத்தும் அழிந்துவிடும்*

**(அல் குர்ஆன் 6:88)**

﴿وَلَقَدْ اُوْحِىَ اِلَيْكَ وَاِلَى الَّذِيْنَ مِنْ قَبْلِكَ لَٮِٕنْ اَشْرَكْتَ لَيَحْبَطَنَّ عَمَلُكَ وَلَتَكُوْنَنَّ مِنَ الْخٰسِرِيْنَ﴾

*(நபியே!) உங்களுக்கும், உங்களுக்கு முன்னிருந்த ஒவ்வொருவருக்கும் மெய்யாகவே வஹீ மூலம் அறிவிக்கப்பட்டது. (என்னவென்றால், இறைவனுக்கு) நீங்கள் இணைவைத்தால், உங்களுடைய நன்மைகள் அனைத்தும் அழிந்து, நிச்சயமாக நீங்கள் நஷ்டமடைந்தவர்களில் ஆகிவிடுவீர்கள் (என்பதாகும்).*

**(அல் குர்ஆன் 39:65)**

**2. இக்லாஸ்:** உளத்தூய்மை என்றால் பிறர் புகழ்வதற்காகவோ அல்லது மக்களுக்கு மத்தியில் நற்பெயரும் அந்தஸ்தும் பெறுவதற்காகவோ இல்லாமல் அல்லாஹ்வுக்காக மட்டுமே தூய்மையாக ஒருவர் தன் நல்லமல்களை செய்வது.

﴿فَٱدۡعُواْ ٱللَّهَ مُخۡلِصِينَ لَهُ ٱلدِّينَ﴾

*...நீங்கள் முற்றிலும் அவனுக்கே வழிப்பட்டு, கலப்பற்ற மனதுடையவர்களாக அல்லாஹ் ஒருவனையே (பிரார்த்தனை செய்து) அழைத்துக் கொண்டிருங்கள்.* **(அல் குர்ஆன்: 40:14)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

"مَنْ قَالَ لَا إِلَهَ إِلَّا اللَّهُ مُخْلِصًا دَخَلَ الْجَنَّةَ" [صحيح رواه البزار وغيره]

யார் ஒருவர் உளத்தூய்மையோடு வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வை தவிர வேறு யாரும் இல்லை என்று சாட்சி கூறுகிறாரோ அவர் சுவர்க்கம் நுழைவார். **(அல்-பஸ்ஸார்)**

**3. நபிவழி:** நல்லமல்கள் அனைத்தும் நபி ﷺ அவர்கள் காட்டிய வழியில் செய்வது.

அல்லாஹ் தன் திருமறையில் கூறுகிறான்:

﴿وَمَآ ءَاتَىٰكُمُ ٱلرَّسُولُ فَخُذُوهُ وَمَا نَهَىٰكُمۡ عَنۡهُ فَٱنتَهُواْ﴾

*நம் தூதர் உங்களுக்கு எதை கொடுத்தாரோ அதை எடுத்துக் கொள்ளுங்கள். இன்னும், எதை விட்டும் உங்களை விலக்கினாரோ, (அதைவிட்டும்) விலகிக் கொள்ளுங்கள்.*

**(அல் குர்ஆன் 59:7)**

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்:

"مَنْ عَمِلَ عَمَلًا لَيْسَ عَلَيْهِ أَمْرُنَا فَهُوَ رَدٌّ". [رواه مسلم]

“நம்முடைய மார்க்கத்தில் இல்லாத ஒரு செயலை யார் புதிதாகச் செய்கிறாரோ அது நிராகரிக்கப்பட்டதாகும்” என்று கூறினார்கள் என ஆயிஷா رضي الله عنها அவர்கள் எனக்கு அறிவித்தார்கள்". **(முஸ்லிம்)**



## ８. பெரிய இணைவைப்பு (ஷிர்க்குல் அக்பர்)

**கேள்வி 1:** பெரிய ஷிர்க் என்றால் என்ன?

*பதில்:* துஆ கேட்பது, அறுத்து பலியிடுவது போன்ற வணக்கங்களின் வகைகளில் ஏதேனும் ஒன்றை அல்லாஹ் அல்லாத பிறருக்கு செய்வது பெரிய ஷிர்க் ஆகும்.

இதற்கு ஆதாரம், அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிடுகின்றான்,

**﴿وَلَا تَدۡعُ مِن دُونِ ٱللَّهِ مَا لَا يَنفَعُكَ وَلَا يَضُرُّكَۖ فَإِن فَعَلۡتَ فَإِنَّكَ إِذٗا مِّنَ ٱلظَّٰلِمِينَ﴾**

*உமக்கு (எவ்வித) நன்மையையோ, தீமையையோ செய்ய இயலாத அல்லாஹ் அல்லாததை எதனையும் நீர் பிரார்த்திக்க வேண்டாம்; (அவ்வாறு) செய்வீராயின் நிச்சயமாக நீர் அநியாயக்காரர்களில் ஒருவராகிவிடுவீர்.* **(அல் குர்ஆன் 10:106)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்,

"أَكْبَرُ الْكَبَائِرِ الْإِشْرَاكُ بِاللَّهِ وَعُقُوقُ الْوَالِدَيْنِ وَشَهَادَةُ الزُّورِ". **[رواه مسلم]**

“பெரும் பாவங்களிலேயே மிகப்பெரும் பாவங்களை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா?” என்று கேட்டு விட்டு, “அல்லாஹ்வுக்கு இணைவைப்பது, பெற்றோரைப் புண்படுத்துவது, பொய் சாட்சியம் கூறுவது” என்று கூறினார்கள். **(முஸ்லிம்)**

**கேள்வி 2:** **அல்லாஹ்விடம் பாவங்களில் மிகப் பெரியது எது?**

*பதில்:* அல்லாஹ்விடம் பாவங்களில் மிகப் பெரியது ஷிர்க் அக்பர் எனும் பெரிய ஷிர்க்காகும். குர்ஆனில் லுக்மான் ﷺ அவர்கள் தன் மகனுக்கு கூறிய உபதேசம் இதற்கான ஆதாரமாகும்,

﴿يَٰبُنَيَّ لَا تُشۡرِكۡ بِٱللَّهِۖ إِنَّ ٱلشِّرۡكَ لَظُلۡمٌ عَظِيمٞ﴾

*இன்னும் லுஃக்மான் தம் புதல்வருக்கு: "என் அருமை மகனே! நீ அல்லாஹ்வுக்கு இணை வைக்காதே; நிச்சயமாக இணை வைத்தல் மிகப் பெரும் அநியாயமாகும்," என்று நல்லுபதேசம் செய்து கூறியதை (நினைவுபடுத்துவீராக).* **(அல் குர்ஆன் 31:13)**

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ؓ அறிவித்தார்கள். இறைத்தூதர் ﷺ அவர்களிடம் நான், 'அல்லாஹ்விடம் மிகப்பெரிய பாவம் எது?' என்று கேட்டேன்.

"أَنْ تَجْعَلَ لِلَّهِ نِدًّا وَهُوَ خَلَقَكَ". **[متفق عليه]**

அதற்கு அவர்கள், 'அல்லாஹ் உன்னைப் படைத்திருக்க, நீ அவனுக்கு இணைவைப்பதாகும்' என்று பதிலளித்தார்கள். ...' **(புகாரி, முஸ்லிம்)**

**கேள்வி 3:** **(நமது) இந்த உம்மத்தில் ஷிர்க் இருக்கின்றதா?**

*பதில்:* ஆம். இருக்கிறது. இதற்கு ஆதாரம், அல்லாஹ் குர்ஆனில் கூறுவது,

﴿وَمَا يُؤۡمِنُ أَكۡثَرُهُم بِٱللَّهِ إِلَّا وَهُم مُّشۡرِكُونَ﴾

*மேலும் அவர்கள் இணைவைப்பவர்களாக இருக்கிற நிலையிலில்லாமல் அவர்களில் பெரும்பாலோர் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்வதில்லை.* **(அல் குர்ஆன் 12:106)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

"لَا تَقُومُ السَّاعَةُ حَتَّى تَلْحَقَ قَبَائِلُ مِنْ أُمَّتِي بِالْمُشْرِكِينَ وَحَتَّى تَعْبُدَ قَبَائِلُ مِنْ أُمَّتِي الْأَوْثَانَ" **[صحيح رواه الترمذي]**

"என்னுடைய சமுதாயத்தினரில் சில பிரிவினர்கள் இணைவைப்போருடன் சேர்ந்து கொண்டு, சிலைகளைக் வழிபடுபவர்களாக ஆகும் வரை மறுமை நாள் ஏற்படாது." **(திர்மிதீ)**

**கேள்வி 4: மரணமடைந்தவர்கள் அல்லது மறைந்தவர்களிடம் பிரார்த்தனை செய்வதன் சட்டம் என்ன?**

*பதில்:* அவர்களிடம் பிரார்த்தனை செய்வது ஷிர்க் அக்பர் எனும் பெரிய ஷிர்க்காகும். அல்லாஹ் குர்ஆனில் கூறுகின்றான்:

**﴿فَلَا تَدْعُ مَعَ ٱللَّهِ إِلَٰهًا ءَاخَرَ فَتَكُونَ مِنَ ٱلْمُعَذَّبِينَ﴾**

*ஆதலின் அல்லாஹ்வுடன் வேறொரு நாயனை அழைக்காதீர்; அவ்வாறு (செய்வீர்) ஆயின், வேதனை செய்யப்படுபவர்களில் ஒருவராக நீர் ஆகிவிடுவீர்.* **(அல் குர்ஆன் 26:213)**

இறைத்தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்.

"مَنْ مَاتَ وَهْوَ يَدْعُو مِنْ دُونِ اللَّهِ نِدًّا دَخَلَ النَّارَ" (النِّدُّ: اَلشَّرِيْكُ) **[رواه البخاري]**

"அல்லாஹ்வுக்கு இணையாக பிறரை அழைக்கும் நிலையில் மரணித்தவர் நிச்சயமாக நரகத்தில் நுழைந்துவிட்டார்". **(புகாரி)**

**கேள்வி 5: துஆ (பிரார்த்தனை) என்பது வணக்கமா?**

*பதில்:* ஆம், துஆ ஒரு வணக்கமாகும். அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிடுகிறான்:

**﴿وَقَالَ رَبُّكُمُ ٱدْعُونِىٓ أَسْتَجِبْ لَكُمْ ۚ إِنَّ ٱلَّذِينَ يَسْتَكْبِرُونَ عَنْ عِبَادَتِى سَيَدْخُلُونَ جَهَنَّمَ دَاخِرِينَ﴾**

*உங்கள் இறைவன் கூறுகிறான்: "என்னையே நீங்கள் பிரார்த்தியுங்கள்; நான் உங்(கள் பிரார்த்தனை)களுக்கு பதிலளிக்கிறேன்; எவர்கள் என்னை வணங்குவதை விட்டும் பெருமையடித்துக் கொண்டிருக்கிறார்களோ, அவர்கள் சிறுமையடைந்தவர்களாக நரகத்தில் நுழைவார்கள்."*

**(அல் குர்ஆன் 40:60)**

**((என்னை வணங்குவதை))** - அதாவது என்னை பிரார்த்திப்பதை. இங்கு துஆவைக் குறிக்க இபாதத் எனும் பதம் வந்துள்ளது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

"الدُّعَاءُ هُوَ الْعِبَادَةُ". **[رواه الترمذي وقال حسن صحيح]**

"து'ஆவே வணக்கமாகும்." **(திர்மிதீ)**

**கேள்வி 6: இறந்தவர்கள் நம்முடைய பிரார்த்தனைகளை செவியேற்கிறார்களா?**

*பதில்:* இல்லை, அவர்கள் செவியேற்க மாட்டார்கள், அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَمَآ أَنتَ بِمُسۡمِعٖ مَّن فِي ٱلۡقُبُورِ﴾

*...மண்ணறைகளில் உள்ளவர்களைக் கேட்கும்படிச் செய்பவராக நீர் இல்லை.* **(அல் குர்ஆன் 35:22)**

இப்னு உமர் رضي الله عنهما அறிவித்தார்கள்.

பத்ருப் போரில் கொல்லப்பட்ட எதிரிகளின் உடல்கள் ஒரு பாழுங்கிணற்றில் போடப்பட்டிருந்தன. அந்தக் கிணற்றில் கிடந்தவர்களைப் பார்த்த நபி ﷺ அவர்கள்,

﴿فَهَلۡ وَجَدتُّم مَّا وَعَدَ رَبُّكُمۡ حَقا﴾

‘*உங்களுடைய இறைவன் உண்மையாகவே வாக்களித்தவற்றை நீங்கள் அடைந்து கொண்டீர்களா?*’ எனக் கேட்டார்கள். (அல் குர்ஆன் 7:44) என்ற வசனத்தை ஓதினார்கள்.

அதன் பிறகு கூறினார்கள்,

"إِنَّهُمْ الْآنَ يَسْمَعُونَ مَا أَقُولُ"

“இப்போது அவர்கள் நான் சொல்வதைக் கேட்கிறார்கள்.”

இச்சம்பவம் ஆயிஷா ﵂ அவர்களிடம் அறிவிக்கப்பட்டபோது அவர்கள் கூறினார்கள்:

"إِنَّمَا قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِنَّهُمْ الْآنَ لَيَعْلَمُونَ أَنَّمَا كُنْتُ أَقُولُ لَهُمْ هُوَ الْحَقُّ"

நபி ﷺ அவர்கள் ‘இப்போது அவர்கள் நான் அவர்களுக்கு சொல்லிக் கொண்டிருந்தது உண்மை என்பதை அறிவார்கள்.’ என்று தான் கூறினார்கள், என்று சொல்லி விட்டு,

﴿إِنَّكَ لَا تُسۡمِعُ ٱلۡمَوۡتَىٰ﴾

“*நிச்சயமாக நீர் மரித்தோரைக் கேட்கும் படிச் செய்ய முடியாது.........*” **(அல் குர்ஆன் 27:80)**

என்ற வசனத்தை ஓதினார்கள்.

"وَقَالَ قَتَادَةُ رَاوِيُ حَدِيْثِ أَبِي طَلْحَةَ الَّذِي فِي مَعْنَاهُ: أَحْيَاهُمْ اللَّهُ حَتَّى أَسْمَعَهُمْ قَوْلَهُ تَوْبِيخًا وَتَصْغِيرًا وَتَقْمِئَةً وَحَسْرَةً وَنَدَامَةً". **[رواه البخاري في كتاب المغازي باب ٨]**

இந்த ஹதீஸை அறிவிக்கும் கதாதா ﵀ அவர்கள் கூறினார்கள்: “அவர்களை இழிவுபடுத்தி சிறுமைப் படுத்தி தண்டிப்பதற்காகவும், அவர்கள் (தமக்கு நேர்ந்துவிட்ட) இழப்பை எண்ணி வருந்துவதற்காகவும் நபி ﷺ அவர்களின் சொல்லைச் செவியேற்கச்

செய்யும் முகமாக (அந்த நேரத்தில் மட்டும்) அல்லாஹ் அவர்ளுக்கு உயிரளித்து கேட்க செய்தான். **(புகாரி)**

இந்த ஹதீஸிலிருந்து பெறப்படும் படிப்பினைகள்:

1. பத்ரு போரில் கொல்லப்பட்ட இணைவைப்பவர்கள் (அல்லாஹ்வின் கட்டளையால்) தற்காலிகமாக செவியேற்கும் சக்தி பெற்றவர்களாக ஆக்கப்பட்டார்கள்.

“إِنَّهُمْ الْآنَ يَسْمَعُونَ” “இப்போது அவர்கள் நான் சொல்வதைக் கேட்கிறார்கள்.” என்ற நபிமொழி

இப்போது அவர்களால் கேட்க முடியும், பிறகு அவர்களால் கேட்க முடியாது என்பதையே குறிக்கிறது.

கதாதா ﵀ அவர்கள் கூறியதைப் போன்று “அவர்களை இழிவுபடுத்தி சிறுமைப் படுத்தி தண்டிப்பதற்காக நபி ﷺ அவர்களின் சொல்லைச் செவியேற்க (அந்த நேரத்தில் மட்டும்) அல்லாஹ் அவர்களுக்கு உயிரளித்தான்.”

2. இப்னு உமர் ﵄ அவர்களுடைய அறிவிப்பை மறுக்கும் ஆயிஷா ﵂ அவர்களுடைய வாதம்,

أَنَّ النَّبِيَّ – صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ – لَمْ يَقُلْ "يَسْمَعُونَ"

நபி ﷺ அவர்கள் ‘அவர்கள் நான் சொல்வதைக் கேட்கிறார்கள்’ என்று கூறவில்லை,

மாறாக, بَلْ قَالَ: "إِنَّهُمْ الْآنَ يَسْمَعُونَ" ‘இப்போது அவர்கள் அறிவார்கள்.’ என்று தான் கூறினார்கள்.

இந்த வாதம், ﴿إِنَّكَ لَا تُسْمِعُ ٱلْمَوْتَىٰ﴾ “*நிச்சயமாக நீர் மரித்தோரைக் கேட்கும் படிச் செய்ய முடியாது..............*” (அல்குர்ஆன் 27:80) என்ற வசனத்தை அடிப்படையாக கொண்டது.

3. இப்னு உமர் ﵄ மற்றும் ஆயிஷா ﵂ இவர்கள் இருவருடைய ஹதீஸ்களையயும் பின்வரும் முறையில் இணைக்கலாம்:

குர்ஆனில் தெளிவாகக் குறிப்பிட்டிருப்பதைப் போல், இறந்தவர்கள் கேட்க முடியாது என்பது உண்மை;

(ஆனால், கதாதா ﵀ கூறுவது போல,)

'பத்ருப்போரில் கொல்லப்பட்ட இணைவைப்பாளர்களை அல்லாஹ் ஒரு அற்புதமாக நபி ﷺ அவர்களுக்காக, அவர்கள் அவருடைய சொற்களைக் கேட்க வேண்டும் என்பதற்காக உயிரளித்து கேட்க செய்தான்.

அல்லாஹ்வே நன்கு அறிந்தவன்.



## 7. பெரிய ஷிர்கின் வகைகள்

**கேள்வி 1: இறந்தவர்கள் மற்றும் மறைந்தவர்களிடம் உதவி தேடலாமா?**

*பதில்:* இல்லை, நாம் அவர்களிடத்தில் உதவி தேடக்கூடாது மாறாக அல்லாஹ்விடம் மட்டுமே உதவி தேடவேண்டும். அல்லாஹ் கூறுகிறான்,

﴿وَٱلَّذِينَ يَدۡعُونَ مِن دُونِ ٱللَّهِ لَا يَخۡلُقُونَ شَيۡـٔٗا وَهُمۡ يُخۡلَقُونَ ٢٠ أَمۡوَٰتٌ غَيۡرُ أَحۡيَآءٖۖ وَمَا يَشۡعُرُونَ أَيَّانَ يُبۡعَثُونَ﴾

*"(நபியே!) அல்லாஹ்வையன்றி எவற்றை அவர்கள் (இறைவனென) அழைக்கின்றார்களோ அவற்றால் யாதொன்றையும் படைக்க முடியாது. அவைகளும் (அவனால்) படைக்கப் பட்டவைகளாகும். (அன்றி அவை) உயிருள்ளவைகளுமல்ல; உயிரற்றவைகளே. (இறந்தவர்கள்) எப்பொழுது (உயிர் கொடுத்து) எழுப்பப்படுவார்கள் என்பதையும் அவை அறியாது..........".* (அல் குர்ஆன் 16:20,21)

﴿إِذۡ تَسۡتَغِيثُونَ رَبَّكُمۡ فَٱسۡتَجَابَ لَكُمۡ﴾

*"(நினைவு கூறுங்கள்:) உங்களை இரட்சிக்குமாறு உங்கள் இறைவனின் உதவியை நாடியபோது: "(அணி அணியாக உங்களைப்) பின்பற்றி வரக்கூடிய ஓராயிரம் மலக்குகளைக்*

*கொண்டு நிச்சயமாக உங்களுக்கு உதவி புரிவேன்" என்று இறைவன் உங்களுக்கு பதிலளித்தான்".* **(அல் குர்ஆன் 8:9)**

நபி ﷺ அவர்கள் இவ்வாறு துஆ செய்துள்ளார்கள்,

"يَا حَيُّ يَا قَيُّوْمُ، بِرَحْمَتِكَ أَسْتَغِيْثُ". **[حسن رواه الترمذي]**

உயிருள்ளவனே நிலையானவனே (யா ஹய்யு, யா கையூம்) உன் கருணையை கொண்டு உன்னிடம் உதவி தேடுகிறேன். **(திர்மிதீ)**

**கேள்வி 2: அல்லாஹ்வை தவிர்த்து மற்றவர்களிடம் உதவி கேட்கலாமா?**

*பதில்:* இல்லை, அவ்வாறு கேட்கக் கூடாது. ஆதாரம், அல்லாஹ் கூறுகிறான்:

﴿إِيَّاكَ نَعْبُدُ وَإِيَّاكَ نَسْتَعِينُ﴾

"*உன்னையே, நாங்கள் வணங்குகிறோம் உன்னிடமே நாங்கள் உதவியும் தேடுகிறோம்*" **(அல் குர்ஆன் 1:5)**

நபி ஸல் அவர்கள் கூறினார்கள்:

" إِذَا سَأَلْتَ فَاسْأَلِ اللَّهَ وَإِذَا اسْتَعَنْتَ فَاسْتَعِنْ بِاللَّهِ " **[رواه الترمذي وقال حسن صحيح]**

"நீங்கள் கேட்டால் அல்லாஹ்விடம் கேளுங்கள் நீங்கள் உதவி தேடினால் அல்லாஹ்விடமே உதவி தேடுங்கள் **(திர்மிதீ)**

**கேள்வி 3: உயிருடன் இருப்பவர்களிடம் உதவி கேட்கலாமா?**

*பதில்:* ஆம், உயிருடன் இருப்பவர்களிடம் அவர்களால் உதவ முடிந்த காரியங்களில் உதவி கேட்கலாம்.

அல்லாஹ் கூறுகிறான்,

﴿وَتَعَاوَنُوا۟ عَلَى ٱلْبِرِّ وَٱلتَّقْوَىٰ﴾

*“இன்னும் நன்மையிலும் பயபக்தியிலும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ளுங்கள்* **(அல் குர்ஆன் 5:2)**

நபி ஸல் அவர்கள் கூறினார்கள்,

"وَاللَّهُ فِي عَوْنِ الْعَبْدِ مَا كَانَ الْعَبْدُ فِي عَوْنِ أَخِيهِ". **[رواه مسلم]**

ஒரு அடியான் தன் சகோதரனுக்கு உதவும் வரையில் அல்லாஹ் அந்த அடியானுக்கு உதவுகிறான் **(முஸ்லிம்)**

**கேள்வி 4: அல்லாஹ்வைத் தவிர மற்றவர்களுக்காக நேர்ச்சை செய்யலாமா?**

*பதில்:* இல்லை, அல்லாஹ்வைத் தவிர மற்றவர்களுக்காக நேர்ச்சை செய்யக்கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்,

**﴿رَبِّ إِنِّى نَذَرْتُ لَكَ مَا فِى بَطْنِى مُحَرَّرًا﴾**

*(மரியம் عليها السلام அவர்களின் தாய் கூறினார்கள்) “என் இறைவனே! என் கர்ப்பத்தில் உள்ளதை உனக்கு முற்றிலும் அர்பணிக்க நான் நிச்சயமாக நேர்ந்து கொள்கிறான்”* **(அல் குர்ஆன் 3:35)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்,

" مَنْ نَذَرَ أَنْ يُطِيعَ اللَّهَ فَلْيُطِعْهُ وَمَنْ نَذَرَ أَنْ يَعْصِيَهُ فَلَا يَعْصِهِ " **[رواه البخاري]**

“அல்லாஹ்வுக்கு வழிப்படுவதாக ஒருவர் நேர்ந்து கொண்டால் (அதை நிறைவேற்றும் முகமாக) அவனுக்கு அவர் வழிப்படட்டும்! அல்லாஹ்வுக்கு மாறு செய்வதாக ஒருவர் நேர்ந்துகொண்டால் (அதை நிறைவேற்றுவதற்காக) அவனுக்கு அவர் மாறு செய்திட வேண்டாம். **(புகாரி)**

**கேள்வி 5: அல்லாஹ் அல்லாதவருக்காக பிராணிகளை உணவுக்காக அறுத்து பலியிடலாமா ?**

*பதில்:* இல்லை, அவ்வாறு செய்யக்கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்,

﴿قُلْ اِنَّ صَلَاتِىْ وَنُسُكِىْ وَ مَحْيَاىَ وَمَمَاتِىْ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَۙ﴾

*நிச்சயமாக என்னுடைய தொழுகையும் என்னுடைய அறுப்பு (குர்பானியு)ம் என் வாழ்வும் என் மரணமும் அகிலத்தாரின் இரட்சகனாகிய அல்லாஹ்வுக்கே உரித்தானவையாகும்" என்று (நபியே) நீர் கூறுவீராக!* **(அல் குர்ஆன் 6:162)**

﴿فَصَلِّ لِرَبِّكَ وَانْحَرْ﴾

*"எனவே உம் இறைவனைத் தொழுது இன்னும் (குர்பானியும் கொடுத்து அதை) அறுப்பீராக."* **(அல் குர்ஆன் 108:2)**

"இன்னும் (குர்பானியும் கொடுத்து அதை) அறுப்பீராக" : அதாவது அல்லாஹ்வுக்கு மட்டுமே அறுத்து பலியிடுவீராக!

நபி ﷺ அவர்கள் கூறியுள்ளார்,

"لَعَنَ اللهُ مَنْ ذَبَحَ لِغَيْرِ اللهِ" **[رواه مسلم]**

"யார் அல்லாஹ்வை தவிர மற்றவர்களுக்காக அறுத்து பலியிடுகிறாறோ அவரை அல்லாஹ் சபிக்கின்றான்" **(முஸ்லிம்)**

**கேள்வி 6: கஃபாவை தவிர மற்ற இடத்தை (தவாப்) சுற்றி வரலாமா?**

*பதில்:* இல்லை, கஃபாவை தவிர மற்ற இடத்தை தவாப் செய்யக்கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்,

﴿وَلۡيَطَّوَّفُواْ بِٱلۡبَيۡتِ ٱلۡعَتِيقِ﴾

“*(கஃபா எனும்) பூர்வீக ஆலயத்தை தவாஃபும் செய்ய வேண்டும்*”. **(அல் குர்ஆன் 22:29)**

நபி ﷺ கூறினார்கள்,

"مَنْ طَافَ بِالْبَيْتِ سَبْعًا وِصَلَّى رَكْعَتَيْنِ، كَانَ كَعِتْقِ رَقَبَةٍ" **[صحيح رواه ابن ماجه]**

“யார் கஃபாவை ஏழு முறை தவாஃப் செய்து இரண்டு ரகாஅத் தொழுகிறாரோ, அது ஒரு அடிமையை விடுதலை செய்வது போலாகும். **(இப்னு மாஜா)**

**கேள்வி 7: சூனியத்தை பற்றி இஸ்லாமிய சட்டம் என்ன?**

*பதில்:* சூனியம் குப்ர் (இறைமறுப்பு) ஆகும். அல்லாஹ் கூறுகிறான்,

﴿وَلَٰكِنَّ ٱلشَّيَٰطِينَ كَفَرُواْ يُعَلِّمُونَ ٱلنَّاسَ ٱلسِّحۡرَ﴾

*அந்த ஷைத்தான்கள்தான் உண்மையாகவே நிராகரிப்பவர்களாக இருந்தார்கள். ஏனென்றால், அவர்கள் தாம் மனிதர்களுக்கு சூனியத்தைக் கற்றுக்கொடுத்தார்கள்*” **(அல் குர்ஆன் 2:102)**

நபி ﷺ கூறினார்கள்,

"اِجْتَنِبُوا السَّبْعَ الْمُوبِقَاتِ: الشِّرْكُ بِاللَّهِ وَالسِّحْرُ..." **[الحديث رواه مسلم]**

ஏழு கொடிய பாவங்களை தவிர்த்து விடுங்கள்: ஷிர்க், சூனியம் **(முஸ்லிம்)**

(اَلْمُوبِقَاتِ: لَمُهْلِكَاتِ) கொடியவைகள் அதாவது அழிக்கக்கூடியவைகள்.

**கேள்வி 8:** **ஜோதிடம் மற்றும் குறிசொல்பவர்களின் பேச்சை நாம் உண்மையென்று நம்பலாமா?**

*பதில்:* இல்லை நம்பக்கூடாது. அல்லாஹ் கூறுகிறான்.

﴿ قُلْ لَا يَعْلَمُ مَنْ فِي السَّمٰوٰتِ وَالْأَرْضِ الْغَيْبَ إِلَّا اللهُ ﴾

*“நீர் கூறுவீராக: “அல்லாஹ்வைத் தவிர, வானங்களிலும், பூமியிலும் உள்ள எவரும் மறைவாயிருப்பதை அறிய மாட்டார்;......”* **(அல் குர்ஆன் 27:65)**

நபி ﷺ கூறினார்கள்,

مَنْ أَتَى عَرَّافًا أَوْ كَاهِنًا فَصَدَّقَهُ بِمَا يَقُولُ فَقَدْ كَفَرَ بِمَا أُنْزِلَ عَلَى مُحَمَّدٍ **[صحيح رواه أحمد]**

“யாரொருவர் ஜோசியக்காரன் அல்லது குறிசொல்பவனிடம் சென்று, அவன் சொல்வதை உண்மையென்று நம்புவாரோ, அவர் முஹம்மது மீது அருளியதை மறுத்துவிட்டார்” **(அஹ்மது)**

**கேள்வி 9:** **மறைவானதைப் பற்றி யாரேனும் அறிய முடியுமா?**

*பதில்:* இல்லை. அல்லாஹ்வைத் தவிர மறைவானதைப் பற்றி எவரும் அறிய முடியாது. அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَعِندَهُۥ مَفَاتِحُ ٱلْغَيْبِ لَا يَعْلَمُهَآ إِلَّا هُوَ﴾

*மறைவானவற்றின் சாவிகள் அவனிடமே இருக்கின்றன. அவற்றை அவனையன்றி வேறெவரும் அறிய மாட்டார்.*
**(அல் குர்ஆன் 6: 59)**

நபி ﷺ கூறினார்கள்,

"لَا يَعْلَمُ الْغَيْبَ إِلَّا اللهُ." **[حسن رواه الطبراني]**

“அல்லாஹ்வை தவிர மற்ற யாரும் மறைவானதைப் பற்றி அறிய மாட்டார்கள்". **(தபரானி)**

**கேள்வி 10: “அல்லாஹ்வை யார் படைத்தது (என்று ஷைத்தான் ஊசலாட்டத்தை ஏற்படுத்தினால் என்ன செய்ய வேண்டும்) ?**

*பதில்:* இப்படிப்பட்ட கேள்விகளால் ஷைத்தான் மனதில் ஊசலாட்டத்தை ஏற்படுத்தினால் அல்லாஹ்விடம் பாதுகாப்பு தேட வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்,

﴿وَإِمَّا يَنزَغَنَّكَ مِنَ ٱلشَّيۡطَٰنِ نَزۡغٞ فَٱسۡتَعِذۡ بِٱللَّهِۖ إِنَّهُۥ هُوَ ٱلسَّمِيعُ ٱلۡعَلِيمُ﴾

“*உங்களுக்கு ஷைத்தான் இடத்திலிருந்து ஏதேனும் ஊசலாட்டம் உம்மை தூண்டுமாயின் உடனே அல்லாஹ்வினிடம் பாதுகாவல் தேடிக்கொள்வீராக, நிச்சயமாக அவன் செவியேற்பவன், நன்கு அறிந்தவன்*” **(அல் குர்ஆன் 41:36)**

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் ஷைத்தானின் சதிவேலைகளிலிருந்து தற்காத்துக்கொள்ள பின்வரும் துஆவை நமக்கு கற்றுக் கொடுத்தார்கள்.

"آمَنْتُ بِاللهِ وَرُسُلِهِ، اَللهُ أَحَدٌ، اَللهُ الصَّمَدُ لَمْ يَلِدْ، وَلَمْ يُوْلَدْ، وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا أَحَدٌ" ثُمَّ لِيَتْفُلْ عَنْ يَسَارِهِ ثَلَاثًا وَلْيَسْتَعِذْ مِنْ الشَّيْطَانِ، وَلْيَنْتَهِ، فَإِنَّ ذَلِكَ يَذْهَبُ عَنْهُ **[هذه خلاصة الأحاديث الصحيحة الواردة في البخاري ومسلم، وأحمد وأبي داود]**

“நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நம்பிக்கைக் கொண்டேன்.

அல்லாஹ் அவன் ஒருவனே. அல்லாஹ் (எவரிடத்தும்) தேவையற்றவன். அவன் (எவரையும்) பெறவுமில்லை;

(எவராலும்) பெறப்படவுமில்லை. அன்றியும், அவனுக்கு நிகராக எவரும் இல்லை.

பிறகு, தனது இடது பக்கம் மூன்று முறை துப்ப வேண்டும். ஷைத்தானை விட்டு பாதுகாப்புத் தேடி கொண்டே இது செய்யும் பொழுது ஷைத்தானின் தூண்டுதல் நம்மை விட்டு விலகி விடும். **(புகாரி, முஸ்லிம், அஹ்மது, அபூ தாவூத் ஆகிய ஹதிஸ்களின் சுருக்கம்)**

ஒருவர் இந்த கேள்விக்கு பதில் இப்படி கூற வேண்டும். அல்லாஹ் படைப்பாளன், அவன் படைக்கப்பட்டவன் அல்ல.

மேலும் சுலபமாக இதை புரிந்துக்கொள்வதற்கு, இப்படியும் கூறலாம்: இரண்டுக்கு முன்பு ஒன்று வரும் ஒன்றுக்கு முன்பு ஒன்றுமில்லை.

அல்லாஹ் ஒருவனே. அவனுக்கு முன்னால் ஒன்றுமில்லை. ஏனெனில், நபி ﷺ கூறினார்கள்,

"اَللَّهُمَّ أَنْتَ الْأَوَّلُ فَلَا شَيْءٌ قَبْلَكَ" **[رواه مسلم]**

“அல்லாஹ் நீயே முதன்மையானவன் உனக்கு முன்பு ஒன்றுமில்லை”. **(முஸ்லிம்)**

**கேள்வி 11: இஸ்லாமுக்கு முன்பு (அரபு நாட்டில் வசித்த) இணைவைப்பாளர்களின் நம்பிக்கைகள் எப்படி இருந்தன?**

*பதில்:* அவர்கள் நல்லடியார்களை அல்லாஹ்விடம் நெருக்கத்தை பெற்றுத் தருவார்கள் என்றும், தங்களுக்கு சிபாரிசு செய்வார்கள் என்றும் அவர்களை அழைக்கக் கூடியவர்களாக இருந்தார்கள்.

அவர்களுடைய நம்பிக்கைகளை குறித்து அல்லாஹ் கூறுகிறான்,

**﴿وَٱلَّذِينَ ٱتَّخَذُواْ مِن دُونِهِۦٓ أَوۡلِيَآءَ مَا نَعۡبُدُهُمۡ إِلَّا لِيُقَرِّبُونَآ إِلَى ٱللَّهِ زُلۡفَىٰٓ﴾**

*“... இன்னும், அவனையன்றிப் பாதுகாப்பாளர்களை எடுத்துக் கொண்டிருப்பவர்கள், “அவர்கள் எங்களை அல்லாஹ்வின் அருகே சமீபமாகக் கொண்டு செல்வார்கள் என்பதற்காகவேயன்றி நாங்கள் அவர்களை வணங்கவில்லை (என்கின்றனர்)...”*

**(அல் குர்ஆன் 39:3)**

﴿وَيَعۡبُدُونَ مِن دُونِ ٱللَّهِ مَا لَا يَضُرُّهُمۡ وَلَا يَنفَعُهُمۡ وَيَقُولُونَ هَٰٓؤُلَآءِ شُفَعَٰٓؤُنَا عِندَ ٱللَّهِ﴾

*“(இணை வைப்பவர்கள்) தங்களுக்கு யாதொரு நன்மையும் தீமையும் செய்ய முடியாத அல்லாஹ் அல்லாதவற்றை வணங்குவதுடன் ‘இவை அல்லாஹ்விடத்தில் எங்களுக்கு சிபாரிசு செய்பவை‘ என்றும் கூறுகின்றனர்...”* **(அல் குர்ஆன் 10:18)**

அந்த இணைவைப்பாளர்களைப் போன்று, இன்றும் முஸ்லிம்களில் சிலர் இதுபோன்ற காரியங்களை செய்யக்கூடியவர்களாக இருக்கின்றார்கள்.

**கேள்வி 12: ஷிர்க் எனும் இணைவைப்பிலிருந்து நாம் எப்படி விலகியிருப்பது?**

பதில்: பின்வருபவற்றை மறுத்து நிரகரிப்பதைக் கொண்டு முற்றிலுமாக இணைவைப்பிலிருந்து விலகியிருக்க முடியும்.

1. படைத்தல், நிர்வகித்தல், வாழ்வாதாரம் அளித்தல் போன்ற அல்லாஹ்வின் செயல்களில் இணைக்கற்பித்தல்.

(எ.கா) (சூஃபிக்களின் நம்பிக்கையைப் போன்று) இப்பிரபஞ்சத்தை சில குதுப்மார்கள் நிர்வகிக்கின்றார்கள் என்று நம்பிக்கை கொள்வது.

ஆனால் அல்லாஹ் (மக்கத்து) இணைவைப்பாளர்களிடம் கேட்குமாறு நபியிடம் கூறுகின்றான்,

﴿وَمَن يُدَبِّرُ ٱلۡأَمۡرَ فَسَيَقُولُونَ ٱللَّهُ﴾

*"...காரியங்களையும் திட்டமிட்டு செயல்படுத்துபவன் யார்? என்று நீர் (நபியே) கேளும், உடனே அவர்கள் அல்லாஹ் என பதில் அளிப்பார்கள்..."* **(அல் குர்ஆன் 10:31)**

2. வணக்க வழிபாடுகளில் இணைக்கற்பித்தல். (எ.கா) இறைத்தூதர்கள் மற்றும் அவ்லியாக்களிடம் உதவி தேடுவது.

அல்லாஹ் கூறுகிறான்:

﴿قُلۡ إِنَّمَآ أَدۡعُواْ رَبِّي وَلَآ أُشۡرِكُ بِهِۦٓ أَحَدًا﴾

*(நபியே!) நீர் கூறும்: "நான் பிரார்த்திப்பதெல்லாம் என்னுடைய இறைவனைத்தான்; அன்றியும், நான் அவனுக்கு எவரையும் இணை வைக்க மாட்டேன்."* **(அல் குர்ஆன் 72:20)**

நபி ﷺ கூறினார்கள்,

" اَلدُّعَاءُ هُوَ الْعِبَادَةُ ". **[رواه الترمذي وقال حسن صحيح]**

"துஆ என்பது வணக்கமாகும்". **(திர்மிதீ)**

3. அல்லாஹ்வின் (பெயர்கள் மற்றும்) பண்புகளில் இணைக்கற்பித்தல். (எ.கா) இறைத்தூதர்கள் மற்றும் அவ்லியாக்கள் மறைவானவற்றை அறிகிறார்கள் என்று நம்புவது,

அல்லாஹ் கூறுகிறான்,

﴿قُل لَّا يَعۡلَمُ مَن فِي ٱلسَّمَٰوَٰتِ وَٱلۡأَرۡضِ ٱلۡغَيۡبَ إِلَّا ٱللَّهُ﴾

"*(மேலும்) நீங்கள் கூறுங்கள்: 'வானங்களிலோ பூமியிலோ*

*மறைந்திருப்பவைகளை அல்லாஹ்வைத் தவிர மற்றெவரும் அறிய மாட்டார். ...*" **(அல் குர்ஆன் 27:65)**

4. அல்லாஹ்வை மனித பண்புகளோடு ஒப்பிட்டு இணைக்கற்பிப்பது: அதாவது, "எப்படி ஒரு நாட்டின் அரசனை இடைத்தரகர் இல்லாமல் என்னால் நேரடியாக சந்திக்க முடியாதோ அதைப்போன்றே அல்லாஹ்விடம் ஒரு மனித இடைத்தரகர் இல்லாமல் என்னால் நேரடியாக துஆச் செய்ய முடியாது" என்று ஒரு மனிதன் கூறுவான் என்றால் அவன் படைத்தவனை படைபினங்களோடு ஒப்பிட்டு விடுகிறான். இவ்வாறு ஒப்பிடுவது ஷிர்க்காகும்.

அல்லாஹ் கூறுகிறான்,

﴿لَيۡسَ كَمِثۡلِهِۦ شَيۡءٞ﴾

"*...அவனுக்கு ஒப்பானது ஒன்றுமில்லை...* **(அல் குர்ஆன்: 42:11)**

அல்லாஹ் கூறுகிறான்,

﴿لَئِنۡ أَشۡرَكۡتَ لَيَحۡبَطَنَّ عَمَلُكَ وَلَتَكُونَنَّ مِنَ ٱلۡخَٰسِرِينَ﴾

"*...நீங்கள் இணைவைத்தால், உங்களுடைய நன்மைகள் அனைத்தும் அழிந்து, நிச்சயமாக நீங்கள் நஷ்டமடைந்தவர்களில் ஆகிவிடுவீர்கள்...*" **(அல் குர்ஆன்: 39:65)**

ஒருவர் இந்த இணைவைப்பின் அனைத்து வகைகளிலிருந்து தன்னை விலக்கிக்கொண்டு அல்லாஹ்விடம் மீண்டு தவ்பா - பாவமன்னிப்பு கோருவாரென்றால் அவர் ஏகத்துவவாதியாக கருதப்படுவார்.

அல்லாஹ்வே! எங்களை உன்னை மட்டுமே

வணங்கக்கூடிய ஏகத்துவவாதிகளாக ஆக்குவாயாக! எங்களை இணைவைப்பவர்களாக ஆக்கிவிடாதே!.

**கேள்வி 13: பெரிய இணைவைப்பினால் ஏற்படும் இழப்புகள் யாவை?**

*பதில்:* (ஷிர்க் அக்பர்) பெரிய இணைவைப்பு நிரந்தரமான நரகத்திற்கு இட்டுச்செல்லும். அல்லாஹ் கூறுகிறான்,

﴿إِنَّهُ مَن يُشۡرِكۡ بِٱللَّهِ فَقَدۡ حَرَّمَ ٱللَّهُ عَلَيۡهِ ٱلۡجَنَّةَ وَمَأۡوَىٰهُ ٱلنَّارُ وَمَا لِلظَّٰلِمِينَ مِنۡ أَنصَارٍ﴾

*எவர் அல்லாஹ்வுக்கு இணை வைக்கின்றாரோ அவருக்கு நிச்சயமாக அல்லாஹ் சுவனபதியைத் தடுத்து விடுகின்றான். அவர் செல்லும் இடம் நரகம்தான். (இத்தகைய) அநியாயக்காரர்களுக்கு (மறுமையில்) உதவி செய்பவர்கள் ஒருவருமில்லை.* (அல் குர்ஆன் 5:72)

நபி ﷺ கூறினார்கள்,

"مَنْ مَاتَ يُشْرِكُ بِاللَّهِ شَيْئًا دَخَلَ النَّارَ" **[رواه مسلم]**

“யார் ஒருவர் அல்லாஹ்வை இணைவைப்பைக் கொண்டு சந்திக்கிறாரோ அவர் நரகம் புகுவார்” **(முஸ்லிம்)**

**கேள்வி 14: அல்லாஹ்வுக்கு இணைவைக்கக்கூடிய ஒருவருக்கு அவருடைய நல்லமல்கள் பலன் தருமா?**

*பதில்:* இல்லை. அல்லாஹ்வுக்கு இணைவைக்கக் கூடிய ஒருவருக்கு அவருடைய நல்லமல்கள் ஒரு போதும் பலன் தராது.

அல்லாஹ் கூறுகிறான்.

﴿وَلَوۡ أَشۡرَكُواْ لَحَبِطَ عَنۡهُم مَّا كَانُواْ يَعۡمَلُونَ﴾

*...அவர்கள் (இதனைத் தவிர்த்து அல்லாஹ்வுக்கு) இணைவைத்தாலோ அவர்கள் செய்து கொண்டிருந்த (நன்மையான) காரியங்கள் அனைத்தும் அழிந்துவிடும்...*

**(அல் குர்ஆன் 6:88)**

நபி ﷺ கூறினார்கள், அல்லாஹ் கூறியதாக,

" أَنَا أَغْنَى الشُّرَكَاءِ عَنْ الشِّرْكِ مَنْ عَمِلَ عَمَلًا أَشْرَكَ فِيهِ مَعِي غَيْرِي تَرَكْتُهُ وَشِرْكَهُ" .

**[حديث قدسي رواه مسلم]**

"அல்லாஹ் கூறுகிறான் எனக்கு இணை(பங்காளிகள்) தேவை இல்லை. யாரேனும் ஒரு அமல் செய்து அதில் எனக்கு இணை வைத்தால், நான் அவரையும் அந்த இணை வைத்தலையும் விட்டுவிடுவேன்". **(ஹதீஸ் குத்ஸி , முஸ்லிம்)**



# 8. சிறிய இணைவைப்பு (ஷிர்க்குல் அஸ்கர்)

**கேள்வி 1: ஷிர்க்குல் அஸ்கர் என்றால் என்ன?**

*பதில்:* சிறிய இணைவைப்பு (ஷிர்க்குல் அஸ்கர்) என்பது ரியா எனும் முகஸ்துதியாகும் (அதாவது மற்றவர்கள் பார்க்க வேண்டும் என்பதற்காக அல்லாஹ்வை வணங்குவது).

அல்லாஹ் கூறுகிறான்:

﴿فَمَن كَانَ يَرْجُواْ لِقَآءَ رَبِّهِۦ فَلْيَعْمَلْ عَمَلًا صَٰلِحًا وَلَا يُشْرِكْ بِعِبَادَةِ رَبِّهِۦٓ أَحَدًۢا﴾

*"ஆகவே, எவர் தன் இறைவனைச் சந்திக்க விரும்புகிறாரோ அவர் நற்செயல்களைச் செய்து தன் இறைவனுக்கு ஒருவரையும் இணையாக்காது (அவனையே) வணங்கி வருவாராக!"*

**(அல் குர்ஆன்: 18:110)**

நபி ﷺ கூறினார்கள்:

"إِنَّ أَخْوَفَ مَا أَخَافُ عَلَيْكُمْ اَلشِّرْكُ اَلْأَصْغَرُ: اَلرِّيَاءُ". **[صحيح رواه أحمد]**

நான் உங்கள் விஷயத்தில் அச்சப்படுவதெல்லாம் சிறிய இணை வைப்பாகிய - அர்ரியாவைத் தான். **(அஹ்மது)**

"அல்லாஹ் மற்றும் இன்னார் மட்டும் இல்லை என்றால் (இது நடந்திருக்காது)", என்று கூறுவதும், "அல்லாஹ் மற்றும் இன்னாரின்

நாட்டத்தினால் (இது நடந்தது)" என்று கூறுவது ஷிர்க்குல் அஸ்கரில் அடங்கும்.

நபி ﷺ கூறினார்கள்:

"لَا تَقُولُوا مَا شَاءَ اللَّهُ وَشَاءَ فُلَانٌ وَلَكِنْ قُولُوا مَا شَاءَ اللَّهُ ثُمَّ شَاءَ فُلَانٌ" **[صحيح رواه أحمد]**

இது அல்லாஹ் மற்றும் இன்னார் நாடியதால் (நடந்தது) என்று (இணைத்து) கூறாதீர்கள், மாறாக இது அல்லாஹ் நாடியதால் (நடந்தது), பிறகு இன்னார் நாடியதால் (நடந்தது) என்று கூறுங்கள். **(அஹ்மது)**

**கேள்வி 2: அல்லாஹ்வையன்றி வேறு ஒருவரின் பெயரால் சத்தியம் செய்வது அனுமதிக்கப்பட்டதா?**

*பதில்:* இல்லை, அல்லாஹ்வையன்றி வேறு ஒருவரின் பெயரால் சத்தியம் செய்வது அனுமதிக்கப்பட்டது அல்ல.

அல்லாஹ் கூறுகிறான்:

﴿قُلْ بَلَىٰ وَرَبِّى لَتُبْعَثُنَّ﴾

*(நபியே!) நீங்கள் கூறுங்கள்: 'அவ்வாறன்று. என் இறைவன் மீது சத்தியமாக! மெய்யாகவே நீங்கள் எழுப்பப்படுவீர்கள்.*

**(அல் குர்ஆன்: 64:7)**

நபி ﷺ கூறினார்கள்:

"مَنْ حَلَفَ بِغَيْرِ اللَّهِ فَقَدْ أَشْرَكَ" **[صحيح رواه أحمد]**

"ஒருவர் அல்லாஹ் அல்லாத (மற்ற)வை மீது சத்தியம் செய்தால் அவர் இணைவைத்து விட்டார் (ஷிர்க் செய்து விட்டார்)" **(அஹ்மது)**

நபி ஸல் கூறினார்கள்:

"مَنْ كَانَ حَالِفًا فَلْيَحْلِفْ بِاللَّهِ أَوْ لِيَصْمُتْ". **[متفق عليه]**

"யாரேனும் சத்தியம் செய்வதாக இருந்தால் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்யட்டும். அல்லது மௌனமாக இருக்கட்டும்." **(புஹாரி மற்றும் முஸ்லிம்)**

நபிமார்கள் அல்லது இறைநேசர்களின் மீது சத்தியம் செய்வது சில சமயங்களில் பெரிய வகையான இணைவைப்பாக ஆகிவிடும். அதாவது இறைநேசரால் தனக்கு தீங்கு உண்டாக்கக்கூடும் என்று அஞ்சி அவர் மீது சத்தியம் செய்வது பெரிய இணைவைப்பாகும்.

**கேள்வி 3: கயிறு, மோதிரம் போன்றவைகளை நோய் நிவாரணம் வேண்டி அணியலாமா?**

*பதில்:* இல்லை, அவ்வாறு அணியக் கூடாது. ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَإِن يَمْسَسْكَ ٱللَّهُ بِضُرٍّ فَلَا كَاشِفَ لَهُۥٓ إِلَّا هُوَ﴾

*அல்லாஹ் உங்களுக்கு யாதொரு தீங்கிழைத்தால், அதனை நீக்குபவர்கள் அவனையன்றி வேறெவருமில்லை.*

**(அல் குர்ஆன் : 6:17)**

ஒரு நபர் தன் காய்ச்சல் குணமாக வேண்டும் என்பதற்காக தன் கையில் ஒரு கயிற்றை கட்டியிருப்பதை ஹுதைஃபா ﵁ அவர்கள் பார்த்தார்கள், உடனே அந்தக் கயிற்றை துண்டித்துவிட்டு பின்வரும் குர்ஆன் வசனத்தை ஓதினார்கள்...

﴿وَمَا يُؤْمِنُ أَكْثَرُهُم بِٱللَّهِ إِلَّا وَهُم مُّشْرِكُونَ﴾

*மேலும் அவர்கள் இணைவைப்பவர்களாக இருக்கிற நிலையிலில்லாமல் அவர்களில் பெரும்பாலோர் அல்லாஹ்வின்*

*மீது நம்பிக்கை கொள்வதில்லை.* **(அல் குர்ஆன்: 12:106)**

**(இப்னு அபி ஹாத்திம்)**

**கேள்வி 4: கண் திருஷ்டியிலிருந்து பாதுகாப்பு பெறவேண்டி தாயத்துகளை (கை கால்களில் அணிவதும்) தகடு, தட்டுக்கள், கண்ணாடி கூடுகள் போன்றவைகளை (வீடுகளில்) தொங்க விடலாமா?**

*பதில் :* இல்லை, கண் திருஷ்டியிலிருந்து பாதுகாப்பு பெறுவதற்காக நாம் அவ்வாறு செய்யக்கூடாது. அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَإِن يَمْسَسْكَ ٱللَّهُ بِضُرٍّ فَلَا كَاشِفَ لَهُۥٓ إِلَّا هُوَ﴾

*அல்லாஹ் உங்களுக்கு யாதொரு தீங்கிழைத்தால், அதனை நீக்குபவர்கள் அவனையன்றி வேறெவருமில்லை.*

**(அல் குர்ஆன் : 6:17)**

நபி ﷺ கூறினார்கள்:

"مَنْ عَلَّقَ تَمِيمَةً فَقَدْ أَشْرَكَ". **[صحيح رواه أحمد]**

யார் தாயத்தைத் தொங்க விட்டுக் கொண்டாரோ அவர் இணை வைத்து விட்டார் **(அஹ்மது)**

(تَمِيْمَةٌ தமீமா: காய்ச்சல் மற்றும் கண் திருஷ்டியிலிருந்து பாதுகாப்பு அளிக்கும் என்ற நம்பிக்கையில் அணியப்படும் அனைத்து பொருட்களும் தாயத்து ஆகும்).



## ௯. வஸீலா மற்றும் பரிந்துரை கோருவது

அல்லாஹ் வஸீலாவை குறித்து குர்ஆனில் கூறுகிறான்...

﴿يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ ٱتَّقُوا۟ ٱللَّهَ وَٱبْتَغُوٓا۟ إِلَيْهِ ٱلْوَسِيلَةَ﴾

*“நம்பிக்கை கொண்டவர்களே! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். அவனிடத்திலே “வஸீலா” தேடுங்கள்.*

**(அல் குர்ஆன் 5:35)**

“வஸீலா” வின் விளக்கமாக இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் கூறினார்கள்: “அல்லாஹ்விடம் நெருக்கத்தை வேண்டுதல்”.

அபூகதாதா ﵀ அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிவதைக் கொண்டும், அவன் விரும்புகிற அமல்களை செய்வதைக் கொண்டு அவனிடத்தில் நெருக்கத்தை வேண்டுவது **(நூல்: தப்ஸீர் இப்னு கஸீர்)**

அல்லாஹ்வுக்கும் மனிதனுக்கும் இடையில் நெருக்கத்தை தேடுவதற்கு எந்த விஷயங்கள் துணையாக (காரணிகளாக, இடைச் சாதனமாக) இருக்குமோ அதுவே வஸீலா எனப்படும்)

**கேள்வி 1: வஸீலாவின் வகைகளை குறிப்பிடவும்?**

***பதில்:*** வஸீலா இரு வகைப்படும்:

1. அனுமதிக்கப்பட்ட வஸீலா
2. தடுக்கப்பட்ட வஸீலா.

**அனுமதிக்கப்பட்ட வஸீலா:** அல்லாஹ்விடம் அவனது பெயர்கள் மற்றும் பண்புகளைக் கொண்டும், நல்லமல்களைக் கொண்டும், உயிருடன் இருக்கும் நல்லவர்களிடம் துஆ செய்ய வேண்டுவதைக் கொண்டு அவனிடம் வஸீலா எனும் உதவிக் கோருவது அனுமதிக்கப்பட்ட வஸீலாவாகும். அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَلِلَّهِ ٱلۡأَسۡمَآءُ ٱلۡحُسۡنَىٰ فَٱدۡعُوهُ بِهَا﴾

*அல்லாஹ்வுக்கு மிக அழகான பெயர்கள் இருக்கின்றன. ஆகவே, அவற்றைக்கொண்டு நீங்கள் அவனிடம் துஆ கேளுங்கள்.* **(அல் குர்ஆன் 7:180)**

அதாவது அல்லாஹ்விடத்தில் - அவனது பெயர்களை வஸீலாவாக கொண்டு துஆ செய்யுங்கள்.

மேலும், அல்லாஹ் கூறுகிறான்:

﴿يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ ٱتَّقُواْ ٱللَّهَ وَٱبۡتَغُوٓاْ إِلَيۡهِ ٱلۡوَسِيلَةَ﴾

"*நம்பிக்கை கொண்டவர்களே! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். அவனிடத்திலே "வஸீலா" தேடுங்கள்.*

**(அல்குர் ஆன் 5:35)**

அதாவது "அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிவதைக் கொண்டும், அவன் விரும்புகிற அமல்களை செய்வதைக் கொண்டும் அவனிடத்தில் நெருக்கத்தை வேண்டுங்கள்". (இதை கதாதா ﵀ கூறியதாக இப்னு கஸீர் ﵀ அவர்கள் தப்ஸீர் இப்னு கஸீரில் குறிப்பிட்டுள்ளார்கள்)

நபி ﷺ அவர்கள்:

"أَسْأَلُكَ بِكُلِّ اسْمٍ هُوَ لَكَ سَمَّيْتَ بِهِ نَفْسَكَ". **[صحيح رواه أحمد]**

நீ உனக்கு சூட்டி இருக்கும் ஒவ்வொரு பெயரின் பொருட்டால் உன்னிடம் கேட்கிறேன். **(அஹ்மது)**

மற்றுமொரு ஹதீஸில்,

நபிﷺ அவர்களுடன் சொர்க்கத்தில் இருக்க வேண்டும் என்று ஒரு ஸஹாபி கேட்ட போது நபிﷺ அவர்கள் பின்வருமாறு கூறுவார்கள்:

"فَأَعِنِّي عَلَى نَفْسِكَ بِكَثْرَةِ السُّجُودِ". **[رواه مسلم]**

நீ அதிகமதிகம் ஸஜ்தா செய்வதைக் (உபரியான தொழுகையைக்) கொண்டு எனக்கு உதவுவாயாக. **(முஸ்லிம்)**

(أي الصلاة وهى من العمل الصالح) அதாவது தொழுகை - அதுவும் நல்லமல்களில் உள்ளவையாகும். (எனவே அவற்றை வஸீலாவாக கொண்டு தன்னுடன் சொர்க்கத்தில் இருக்க அல்லாஹ்விடத்தில் உதவி தேடுமாறு அந்த ஸஹாபிக்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.)

மேலும், மூன்று நபர்கள் குகைக்குள் மாட்டிக் கொண்ட அந்த சம்பவத்தில் அவர்கள் அல்லாஹ்விடம் தங்களின் நல்லமல்களை வஸீலாவாக நிறுத்தி துஆ செய்து உதவி தேடிய போது அல்லாஹ் அந்த குகையை மூடி இருந்த பாறையை அகற்றி அவர்களுக்கு உதவி புரிந்தான்.

(இந்த சம்பவம் நல்லமல்களை வஸீலாவாக கொண்டு அல்லாஹ்விடம் உதவி தேடுவதற்கு ஆதாரமாக இருக்கின்றது)

அல்லாஹ்வின் மீதும், நபி ﷺ மீதும் மற்றும் நல்லவர்களின் மீது நாம் வைத்திருக்கும் நேசத்தை குறிப்பிட்டு அல்லாஹ்விடம் வஸீலா வேண்டுவதும் அனுமதிக்கப்பட்ட முறையாகும். ஏனென்றால், அவர்கள் மீது நாம் வைத்திருக்கும் அன்பும் நல்லமல்களில் உள்ளவையாகும்.

தடுக்கப்பட்ட வஸீலா: இறந்தவர்களை அழைப்பதைக் கொண்டும், அவர்களிடம் தேவைகளை வேண்டுவதைக் கொண்டும் வஸீலாக்

கோருவது தடுக்கப்பட்ட வஸீலாவின் வகைகளில் உள்ளவையாகும். நாம் வாழக்கூடிய காலக்கட்டத்தில் இவ்வாறு நடக்கின்றது. இன்னும் இது மிகப்பெரிய இணைவைப்பாகவும் இருக்கின்றது.

அல்லாஹ் கூறுகிறான்,

﴿وَلَا تَدْعُ مِن دُونِ ٱللَّهِ مَا لَا يَنفَعُكَ وَلَا يَضُرُّكَ ۖ فَإِن فَعَلْتَ فَإِنَّكَ إِذًا مِّنَ ٱلظَّٰلِمِينَ﴾

*ஆகவே, உங்களுக்கு யாதொரு நன்மையும், தீமையும் செய்ய சக்தியற்ற அல்லாஹ் அல்லாதவற்றை நீங்கள் அழைக்க வேண்டாம். அவ்வாறு செய்தால் அநியாயக்காரர்களில் நீங்களும் ஒருவராகி விடுவீர்கள்.* **(அல் குர்ஆன் 10:106)**

நபி ﷺ அவர்களின் புகழ், கண்ணியம், அந்தஸ்தைக் கொண்டு வஸீலா தேடுவது, அதாவது "இறைவா நபி ﷺ அவர்களின் புகழ்/ கண்ணியம்/ அந்தஸ்தின் பொருட்டால் என்னை குணப்படுத்துவாயாக" என்று கூறுவதற்கு எவ்வித ஆதாரமும் கிடையாது. ஏனெனில், சஹாபாக்கள் இவ்வாறு வஸீலா தேடியதில்லை. இன்னும், உமர் رضي الله عنه அவர்கள் அன்று உயிருடன் இருந்த அப்பாஸ் رضي الله عنه அவர்களின் துஆவைக் கொண்டே (அல்லாஹ்விடம்) வஸீலா தேடினார்கள் (மழை வேண்டி பிரார்த்தனை செய்தார்கள்). நபியவர்களின் வஃபாத்திற்கு பிறகு ஒருபோதும் அவர்களை கொண்டு அல்லாஹ்விடம் வஸீலா தேடவில்லை (அதாவது நபி ﷺ அவர்களின் மூலம் மழையை வேண்டவில்லை).

இப்படிப்பட்ட வஸீலாவானது சில நேரங்களில் ஷிர்கின் பால் கொண்டு செல்லக்கூடியதாக இருக்கின்றது. அதாவது, ஒரு மனிதன் - அல்லாஹ்வும் மன்னர் மற்றும் ஆட்சியாளரைப் போன்று

இடைத்தரகர்களின் பால் தேவவையுடையவனாக இருக்கின்றான் என நம்பும் போது படைப்பாளனை படைப்பினங்களோடு ஒப்பிட்டு சமமாக்கி விடுகின்றான்.

இமாம் அபூ ஹனீபா ﷺ அவர்கள் கூறினார்கள்:

"أَكْرَهُ أَنْ أَسْأَلُ اللهُ بِغَيْرِ اللهِ". **[ذكره صاحب الدر المختار]**

அல்லாஹ்விடம் அவனைத் தவிர மற்றவரின் மூலம் துஆ செய்வதை நான் வெறுக்கிறேன். **(அத்-துர் அல் முக்தார்)**

**கேள்வி 2: அல்லாஹ்விடம் ஏதேனும் துஆ செய்வதற்கு மனித இடைத்தரகர்கள் தேவையா?**

*பதில்:* இல்லை, அல்லாஹ்விடம் துஆ செய்வதற்கு எந்த இடைத்தரகர்களும் தேவையில்லை.

﴿وَإِذَا سَأَلَكَ عِبَادِى عَنِّى فَإِنِّى قَرِيبٌ﴾

*(நபியே!) உங்களிடம் என்னுடைய அடியார்கள் என்னைப் பற்றிக் கேட்டால் (அதற்கு நீங்கள் கூறுங்கள்:) 'நிச்சயமாக நான் சமீபமாகவே இருக்கின்றேன்.* **(அல் குர்ஆன் 2:186)**

நபி ﷺ கூறினார்கள்,

"إِنَّكُمْ تَدْعُونَ سَمِيعًا قَرِيبًا وَهُوَ مَعَكُمْ". (أي بعلمه) **[رواه مسلم]**

நீங்கள் செவியுறுவோனையும் அருகிலிருப்பவனையுமே அழைக்கிறீர்கள். அவன் உங்களுடனேயே இருக்கிறான் (அதாவது அவனது அறிவால்). (முஸ்லிம்)

**கேள்வி 3: உயிருடன் இருப்பவர்களிடம் துஆ செய்யக்கூறிக் கேட்பது கூடுமா ?**

*பதில்:* ஆம், உயிருடன் இருப்பவர்களிடம் துஆ செய்யக்கூறிக்

கேட்கலாம். ஆனால், மரணித்தவர்களிடம் அவ்வாறு கேட்கக்கூடாது.

அல்லாஹ், நபி ﷺ அவர்கள் உயிருடன் இருக்கும்போது இவ்வாறு பின்வருமாறு கூறினான்:

﴿وَٱسۡتَغۡفِرۡ لِذَنۢبِكَ وَلِلۡمُؤۡمِنِينَ وَٱلۡمُؤۡمِنَٰتِ﴾

*நீங்கள் உங்களுடைய தவறுகளை மன்னிக்கக் கோருவதுடன், நம்பிக்கை கொண்ட ஆண்களுக்கும், பெண்களுக்கும் மன்னிப்பு கோருங்கள்!* **(அல் குர்ஆன் 47:19)**

وَفِي الْحَدِيْثِ الصَّحِيْحِ الَّذِيْ رَوَاهُ التِّرْمِذِيْ: "أَنَّ رَجُلًا ضَرِيْرُ الْبَصَرِ أَتَى النَّبِيَّ– صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ –، فَقَالَ: اُدْعُ اللهَ أَنْ يُعَافِيَنِي

ஒரு கண் பார்வையற்ற மனிதர் நபி ﷺ அவர்களிடம் வந்து "அல்லாஹ் என்னை உடல் ஆரோக்கியத்துடன் வைப்பதற்காக வேண்டி அவனிடம் (எனக்காக) துஆச் செய்யுங்கள்" எனக் கூறினார். **(திர்மிதி)**

**கேள்வி 4: அல்லாஹ்வுக்கும், அவனது அடியார்களுக்கும் மத்தியிலுள்ள இறைத்தூதரின் பணி என்ன ?**

*பதில்:* அல்லாஹ்வின் மார்க்கத்தை மனிதர்களுக்கு எத்திவைப்பதே இறைத்தூதருடைய பணியாகும்.

அல்லாஹ் கூறுகிறான்:

﴿يَٰٓأَيُّهَا ٱلرَّسُولُ بَلِّغۡ مَآ أُنزِلَ إِلَيۡكَ مِن رَّبِّكَ﴾

*தூதரே! உம் இரட்சகனிடமிருந்து உமக்கு இறக்கிவைக்கப்பட்டதை (மனிதர்களுக்கு) எத்திவைத்துவிடுவீராக!* **(அல் குர்ஆன் 5:67)**

"نَشْهَدُ أَنَّكَ قَدْ بَلَّغْتَ"

“நீங்கள் (இறைச்செய்திகள் அனைத்தையும் எங்களிடம்) எத்தி வைத்தீர்கள் என நாங்கள் சாட்சியமளிப்போம்” என்று சஹாபாக்கள் கூறியதற்கு நபி ﷺ அவர்கள் “اَللَّهُمَّ اشْهَدْ” “யா அல்லாஹ், இதற்கு நீயே சாட்சி” என்று கூறினார்கள். **(முஸ்லிம்)**

**கேள்வி 5: (நாளை மறுமையில்) நபி ﷺ அவர்கள் செய்யக்கூடிய பரிந்துரையை (தனக்கு கிடைக்க வேண்டி) யாரிடம் கேட்கவேண்டும் ?**

*பதில்:* நபி ﷺ அவர்களின் பரிந்துரையை நாம் அல்லாஹ்விடமே கேட்கவேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்:

﴿قُل لِّلَّهِ ٱلشَّفَٰعَةُ جَمِيعاً﴾

*கூறுங்கள், சிபாரிசுகள் அனைத்துமே அல்லாஹ்வுக்குச் சொந்தமானவை.* **(அல் குர்ஆன் 39:44)**

நபி ﷺ அவர்கள் தனது தோழருக்கு பின்வருமாறு துஆச் செய்யும்படி கற்றுக் கொடுத்தார்கள்,

"اَللَّهُمَّ شَفِّعْهُ فِيَّ" (أَيْ شَفِّعْ الرَّسُوْلَ فِيَّ) **[رواه الترمذي وقال حسن صحيح]**

யா அல்லாஹ்! மறுமையில் நபி ﷺ அவர்களின் பரிந்துரையை எனக்குக் வழங்குவாயாக!. **(திர்மிதீ)**

மேலும் கூறினார்கள்:

"وَإِنِّي اخْتَبَأْتُ دَعْوَتِي شَفَاعَةً لِأُمَّتِي يَوْمَ الْقِيَامَةِ فَهِيَ نَائِلَةٌ إِنْ شَاءَ اللَّهُ مَنْ مَاتَ مِنْ أُمَّتِي لَا يُشْرِكُ بِاللَّهِ شَيْئًا " . **[رواه مسلم]**

நான் எனது பிரார்த்தனையை , மறுமை நாளில் என் சமுதாயத்தாருக்குப் பரிந்துரை செய்வதற்காகப் பத்திரப்படுத்தி

வைத்துள்ளேன். அல்லாஹ் நாடினால் என் சமுதாயத்தாரில் யார் அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்காமல் மரணிக்கிறாரோ அவருக்கு அது கிடைக்கும். (முஸ்லிம்)

**கேள்வி 6: உயிருடன் இருப்பவர்களிடம் நாம் பரிந்துரை கோரலாமா?**

*பதில்:* உயிருடன் இருப்பவர்களிடம் உலக விவகாரங்களில் பரிந்துரை செய்யவேண்டி கேட்கலாம்.

அல்லாஹ் கூறுகிறான்:

**﴿مَّن يَشۡفَعۡ شَفَاعَةً حَسَنَةً يَكُن لَّهُۥ نَصِيبٌ مِّنۡهَا وَمَن يَشۡفَعۡ شَفَاعَةً سَيِّئَةً يَكُن لَّهُۥ كِفۡلٌ مِّنۡهَا﴾**

*எவரேனும் யாதொரு நன்மையானவற்றுக்கு சிபாரிசு செய்தால் அந்த நன்மையில் ஒரு பங்கு அவருக்குண்டு. (அவ்வாறே) யாதொரு தீய விஷயத்திற்கு யாரும் சிபாரிசு செய்தால் அத்தீமையில் இருந்தும் அவருக்கொரு பாகம் உண்டு.*

**(அல் குர்ஆன் : 4:85)**

நபி ﷺ கூறினார்கள்:

"اِشْفَعُوْا تُؤجَرُوْا" **[صحيح رواه أبو داود]**

மற்றவர்களுக்கு பரிந்துரை செய்யுங்கள், அதன் மூலம் நீங்கள் நன்மையடைவீர்கள். **(அபூ தாவூத்)**

**கேள்வி 7: நபி ﷺ அவர்களை புகழ்வதில் வரம்பு மீறலாமா ?**

*பதில்:* நபி ﷺ அவர்களை புகழ்வதில் நாம் வரம்பு மீறக்கூடாது.

அல்லாஹ் கூறுகின்றான்:

**﴿ قُلۡ إِنَّمَآ أَنَا۠ بَشَرٞ مِّثۡلُكُمۡ يُوحَىٰٓ إِلَيَّ أَنَّمَآ إِلَٰهُكُمۡ إِلَٰهٞ وَٰحِدٞ﴾**

*(நபியே!) நீர் சொல்வீராக: “நிச்சயமாக நான் உங்களைப் போன்ற ஒரு மனிதனே! நிச்சயமாக உங்களுடைய நாயன் ஒரே நாயன்தான் என்று எனக்கு வஹீ அறிவிக்கப்படுகிறது.*

**(அல் குர்ஆன்: 18:110)**

நபி ﷺ கூறினார்கள்:

"لَا تُطْرُونِي كَمَا أَطْرَتْ النَّصَارَى عِيسَى ابْنَ مَرْيَمَ عَلَيْهِ السَّلَام فَإِنَّمَا أَنَا عَبْدٌ فَقُولُوا عَبْدُهُ وَرَسُولُهُ" **[رواه البخاري]**

கிறிஸ்தவர்கள் மர்யமின் மகன் ஈசாவை அளவுக்கு மீறிப் புகழ்ந்து (கடவுள் நிலைக்கு உயர்த்திவிட்டதைப்) போல் நீங்கள் என்னை புகழ்வதில் வரம்பு மீறாதீர்கள். ஏனெனில், நான் அல்லாஹ்வின் அடியான் தான்.

(அப்படி ஏதாவது என்னைப் பற்றிச் சொல்வதாயிருந்தால்) 'அல்லாஹ்வின் அடியார்' என்றும் 'இறைத்தூதர் என்றும் சொல்லுங்கள். **(புகாரி)**

ஒரு மனிதனை வரம்பு மீறி புகழ்வதற்கு "இத்ரா" என்று அரபியில் கூறப்படும்.

**கேள்வி 8: அல்லாஹ்வால் படைக்கப்பட்ட முதல் மனிதர் யார்?**

*பதில்:* அல்லாஹ்வால் படைக்கப்பட்ட முதல் மனிதர் ஆதம் عليه السلام ஆவார்கள்.

அல்லாஹ்வால் படைக்கப்பட்ட முதல் பொருள் எழுதுகோலாகும்.

அல்லாஹ் கூறுகிறான்:

﴿إِذْ قَالَ رَبُّكَ لِلْمَلَٰٓئِكَةِ إِنِّى خَٰلِقُۢ بَشَرًا مِّن طِينٍ﴾

*(நபியே!) உம்முடைய இறைவன் மலக்குகளிடம் “நிச்சயமாக நான்*

*களிமண்ணிலிருந்து மனிதனைப் படைக்க இருக்கின்றேன்" என்று கூறிய வேளையை (நினைவு கூர்வீராக!)* **(அல் குர்ஆன் 38:71)**

மேலும் நபி ﷺ அவர்கள் கூறினார்கள்...

"كُلُّكُمْ بَنُو آدَمَ ، وَآدَمُ خُلِقَ مِنْ تُرَابٍ"، **[رواه البزار وصححه الألباني]**

நீங்கள் எல்லோரும் ஆதமின் மக்களே! ஆதமோ மண்ணால் படைக்கப்பட்டவர். (அல் பஸ்ஸார்)

நபி ﷺ அவர்கள் மேலும் கூறினார்கள்:

"إِنَّ أَوَّلَ مَا خَلَقَ اللَّهُ الْقَلَمَ". **[رواه أبو داود والترمذي وقال حسن صحيح]**

அல்லாஹ் முதன் முதலில் எழுதுகோலைப் படைத்தான்.

(أَيْ بَعْدَ الْمَاءِ وَالْعَرْشِ) (அதாவது அர்ஷ் மற்றும் நீருக்கு பிறகு முதன் முதலில் எழுதுகோலைப் படைத்தான்). **(அபூ தாவூத், திர்மிதீ)**

அல்லாஹ் முதன்முதலில் நபியவர்களின் ஒளியை படைத்தான் எனும் ஹதீஸ் இட்டுக்கட்டப்பட்டதாகும்.

وَأَمَّا حَدِيْثُ "أَوَّلُ مَا خَلَقَ اللَّهُ نُوْرَ نَبِيِّكَ يَا جَابِرُ"

இது குர்ஆன், ஸுன்னாஹ், பகுத்தறிவுக்கு முரண்படும் பொய்யான செய்தியாகும்.

இமாம் அஸ்-ஸுயூத்தி ؒ அவர்கள் கூறினார்கள்:

"இது அறிவிப்பாளர் தொடரற்ற ஹதீஸாகும்".

இமாம் அல்-க(غ)மாரி ؒ அவர்கள் கூறினார்கள்: இது இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸாகும்.

இமாம் அல்பானீ ؒ அவர்கள் கூறினார்கள்: இது பொய்யான செய்தியாகும்.



# 10. குர்ஆன் மற்றும் ஹதீஸின் அடிப்படையில் அமல் புரிவது

**கேள்வி 1: அல்லாஹ் குர்ஆனை எதற்கு இறக்கினான்?**

*பதில்:* நமது அன்றாட வாழ்வை குர்ஆனின் அடிப்படையில் அமைத்து செயல்படுவதற்காக இறக்கியருளினான்.

அல்லாஹ் கூறுகிறான்,

﴿ٱتَّبِعُواْ مَآ أُنزِلَ إِلَيۡكُم مِّن رَّبِّكُمۡ﴾

*உங்களுக்காக உங்கள் இறைவன் அருளியதையே பின்பற்றுங்கள்.*

**(அல் குர்ஆன் 7:3)**

அல்லாஹ்வின் திருத்தூதர் ﷺ அவர்கள் கூறுவதாவது:

"إِقْرَؤُوْا الْقُرْآنَ، وَاعْمَلُوْا بِهِ وَلَا تَأْكُلُوْا بِهِ..." **[صحيح رواه أحمد]**

"குர்ஆனை படியுங்கள் அதன் கட்டளைகளை அமல் படுத்துங்கள். குர்ஆனை உங்கள் பிழைப்பாக ஆக்கி கொள்ளாதீர்கள் **(அஹ்மது)**

**கேள்வி 2: ஆதாரபூர்வமான ஹதீஸ்களை பின்பற்றுவதன் சட்டநிலை என்ன?**

*பதில்:* ஆதாரபூர்வமான ஹதீஸ்களை பின்பற்றுவது கடமையாகும்.

அல்லாஹ் கூறுகிறான்,

﴿وَمَآ ءَاتَىٰكُمُ ٱلرَّسُولُ فَخُذُوهُ وَمَا نَهَىٰكُمۡ عَنۡهُ فَٱنتَهُواْ﴾

“*மேலும், (நம்) தூதர் உங்களுக்கு எதைக் கொடுக்கின்றாரோ அதை எடுத்துக் கொள்ளுங்கள்; இன்னும், எதை விட்டும் உங்களை விலக்குகின்றாரோ அதை விட்டும் விலகிக் கொள்ளுங்கள்;........*” **(அல் குர்ஆன் 59:7)**

அல்லாஹ்வின் திருத்தூதர் ﷺ கூறியதாவது:

"عَلَيْكُمْ بِسُنَّتِي وَسُنَّةِ الْخُلَفَاءِ الرَّاشِدِينَ الْمَهْدِيِّينَ فتَمَسَّكُوا بِهَا". **[صحيح رواه أحمد]**

எனது சுன்னாவையும் எனக்குப்பின் வந்த நேர்வழி பெற்ற கலீஃபாக்களின் சுன்னாவையும் நீங்கள் பின்பற்றுங்கள். **(அஹ்மது)**

**கேள்வி 3. ஹதீஸ்களின் தேவையில்லாமல் குர்ஆனைக் கொண்டு மட்டும் தன்னிறைவு அடைய இயலுமா (அதாவது ஹதீஸின்றி குர்ஆன் மட்டும் போதுமா) ?**

*பதில்:* இல்லை, ஹதீஸ்களின் தேவையில்லாமல் குர்ஆனைக் கொண்டு மட்டும் தன்னிறைவு அடையமுடியாது. (அதாவது மார்க்கத்தை அணுகுவதற்கு குர்ஆனும், ஹதீஸும் இன்றியமையாததாக இருகின்றது)

அல்லாஹ் கூறுகிறான்,

﴿وَأَنزَلْنَآ إِلَيْكَ ٱلذِّكْرَ لِتُبَيِّنَ لِلنَّاسِ مَا نُزِّلَ إِلَيْهِمْ وَلَعَلَّهُمْ يَتَفَكَّرُونَ﴾

“*(நபியே!) மனிதர்களுக்கு அருளப்பட்டதை நீர் அவர்களுக்கு தெளிவுபடுத்துவதற்காகவும் அவர்கள் சிந்திப்பதற்காகவும் உமக்கு இவ்வேதத்தை நாம் அருளினோம்.*” **(அல் குர்ஆன் 16:44)**

நபி ﷺ கூறினார்கள்,

"أَلَا إِنِّي أُوتِيتُ الْقُرْآنَ وَمِثْلَهُ مَعَهُ". **[صحيح رواه أبو داود]**

நபி ﷺ கூறினார்கள் “ நிச்சயமாக நான் குர்ஆனையும்,

குர்ஆன் போன்ற மற்றொன்றையும் வழங்கபட்டவனாக இருக்கிறேன்" (அபூ தாவூத்)

**கேள்வி 4. அல்லாஹ் மற்றும் அவனது தூதரின் கூற்றுகளுக்கு மேல் மற்றவர்களின் கூற்றுகளை முற்படுத்தலாமா ?**

*பதில்:* இல்லை. அல்லாஹ் மற்றும் அவனது தூதரின் கூற்றுகளுக்கு மேல் மற்றவர்களின் கூற்றுகளை நாம் முற்படுத்தக்கூடாது. (அவைகளை விட எந்த ஒரு கருத்திற்கும் முன்னுரிமை வழங்கக்கூடாது).

அல்லாஹ் இவ்வாறு கூறுகின்றான்,

**﴿يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ لَا تُقَدِّمُواْ بَيْنَ يَدَىِ ٱللَّهِ وَرَسُولِهِۦ﴾**

*முஃமின்களே! அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் முன்னர் (பேசுவதற்கு) நீங்கள் முந்தாதீர்கள்; அல்லாஹ்விடம் பயபக்தியுடன் இருங்கள்; நிச்சயமாக அல்லாஹ் (யாவற்றையும்) செவியுறுபவன்; நன்கறிபவன்.* **(அல் குர்ஆன் 49:1)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்,

"لَا طَاعَةَ لِمَخْلُوْقٍ فِي مَعْصِيَةِ الْخَالِقِ". **[صحيح رواه أحمد]**

படைத்தவனுக்கு மாறுச் செய்வதில் படைபினங்களுக்கு கட்டுப்படுதல் கூடாது. **(அஹ்மது)**

இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் கூறினார்கள்,

"أُرَاهُمْ سَيَهْلِكُونَ أَقُولُ قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَيَقُولُ نَهَى أَبُو بَكْرٍ وَعُمَرُ!!". **[رواه أحمد وابن عبد البر]**

அவர்களின் அழிவு வெகுவிரைவில் உள்ளதை நான் பார்கிறேன். நான் அவர்களுக்கு, "நபி ﷺ கூறினார்கள்..." என்று

(அதாவது அல்லாஹ்வின் தூதரின் ஹதீஸ்களை) சொல்கிறேன், அவர்களோ, 'அபூ பக்ர் ﵁ மற்றும் உமர் ﵁ அவர்கள் இப்படித்தான் கூறினார்களே........' என்று பதில் அளிக்கின்றார்கள்.

**கேள்வி 5. நமக்கிடையே மார்க்க விஷயங்களில் கருத்து வேறுபாடுகள் எழும்போது என்ன செய்ய வேண்டும்?**

*பதில்:* குர்ஆன் மற்றும் ஆதாரபூர்வமான சுன்னாஹ்வின் பால் மீள வேண்டும். (அதாவது குர்ஆன் மற்றும் ஸஹீஹான ஹதீஸுகளை பற்றி பிடிக்கவேண்டும்)

அல்லாஹ் கூறுகிறான்,

﴿ فَإِن تَنَازَعْتُمْ فِى شَىْءٍ فَرُدُّوهُ إِلَى ٱللَّهِ وَٱلرَّسُولِ إِن كُنتُمْ تُؤْمِنُونَ بِٱللَّهِ وَٱلْيَوْمِ ٱلْءَاخِرِ ذَٰلِكَ خَيْرٌ وَأَحْسَنُ تَأْوِيلًا ﴾

*ஏதேனும் விவகாரத்தில் நீங்கள் கருத்து வேறுபாடு கொண்டால் - மெய்யாகவே நீங்கள் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்புபவர்களாக இருப்பின் - அதை அல்லாஹ்விடமும், (அவன்) தூதரிடமும் ஒப்படைத்துவிடுங்கள் - இதுதான் (உங்களுக்கு) மிகவும் சிறப்பான, அழகான முடிவாக இருக்கும்.*

**(அல் குர்ஆன் 4:59)**

நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறினார்கள்:-

تَرَكْتُ فِيكُمْ أَمْرَيْنِ لَنْ تَضِلُّوا مَا تَمَسَّكْتُمْ بِهِمَا كِتَابَ اللَّهِ وَسُنَّةَ رَسُوْلِهِ. **[رواه مالك وصححه الألباني في صحيح الجامع]**

"நான் இரு விஷயங்களை உங்களிடம் விட்டு செல்கிறேன், அதை உறுதியாக பற்றிப் பிடித்திருக்கும் காலம் வரையில் நீங்கள் கண்டிப்பாக வழி தவறவே மாட்டீர்கள். அவை அல்லாஹ்வின் வேதமும், அவனது தூதர் ﷺ அவர்களின் சுன்னாஹ்வுமாகும்".

(இமாம் மாலிக் ﷺ அறிவித்தார்கள், இமாம் அல்பானி ﷺ அவர்கள் ஸஹீஹுல் ஜாமிஇல் இந்த ஹதீஸை ஆதாரப்பூர்வமானது என்று கூறியுள்ளார்கள்)

**கேள்வி 6. அல்லாஹ்வையும், அவனது தூதர் ﷺ அவர்களையும் நாம் எவ்வாறு நேசிக்க வேண்டும்?**

*பதில்:* அல்லாஹ்விற்கும் அவனது தூதருக்கும் கீழ்படிந்து, அவர்களது கட்டளைகளை ஏற்று நடப்பதைக் கொண்டு நேசிக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:-

﴿قُلْ إِن كُنتُمْ تُحِبُّونَ ٱللَّهَ فَٱتَّبِعُونِى يُحْبِبْكُمُ ٱللَّهُ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ ۗ وَٱللَّهُ غَفُورٌ رَّحِيمٌ﴾

*(நபியே! மனிதர்களை நோக்கி) நீங்கள் கூறுங்கள்: 'நீங்கள் மெய்யாகவே அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். உங்களை அல்லாஹ் நேசிப்பான். உங்கள் பாவங்களையும் அவன் மன்னித்து விடுவான். அல்லாஹ் மிக அதிகம் மன்னிப்பவனும், நிகரற்ற அன்புடையவனுமாக இருக்கின்றான்.'* **(அல் குர்ஆன் 3:31)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:-

"لَا يُؤْمِنُ أَحَدُكُمْ حَتَّى أَكُونَ أَحَبَّ إِلَيْهِ مِنْ وَالِدِهِ وَوَلَدِهِ وَالنَّاسِ أَجْمَعِينَ" **[متفق عليه]**

'உங்களில் ஒருவருக்கு அவரின் தந்தை, அவரின் குழந்தைகள், ஏனைய மக்கள் அனைவரையும் விட நான் மிக அன்பானவராகும் வரை அவர் (உண்மையான) இறைநம்பிக்கையாளராக மாட்டார்'. **(புகாரி, முஸ்லிம்)**

**கேள்வி 7.** **விதியை நம்பிக் கொண்டு நல்லறங்கள் ஏதும் புரியாமல் இருக்கலாமா ?**

*பதில்:* இவ்வாறு (விதியை நம்பிக் கொண்டு) நல்லமல்கள் புரியாமல் இருக்கக்கூடாது

அல்லாஹ் கூறுகிறான்,

﴿فَأَمَّا مَنْ أَعْطَىٰ وَٱتَّقَىٰ ۝ وَصَدَّقَ بِٱلْحُسْنَىٰ ۝ فَسَنُيَسِّرُهُۥ لِلْيُسْرَىٰ﴾

*ஆகவே, (உங்களில்) எவர் தானம் செய்து (அல்லாஹ்வுக்குப்) பயந்து, (இந்த மார்க்கத்திலுள்ள) நல்ல காரியங்களையும் (நல்லதென்றே) உண்மையாக்கி வைக்கின்றாரோ, அவர் சுகமடைவதற்குள்ள (சுவனபதியின்) வழியை நாம் அவருக்கு எளிதாக்கித் தருவோம்.* **(அல் குர்ஆன் 92:5-7)**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்,

" اِعْمَلُوا فَكُلٌّ مُيَسَّرٌ لِمَا خُلِقَ لَهُ ". **[رواه البخاري، ومسلم]**

“நீங்கள் செயலாற்றுங்கள் (அமல் செய்யுங்கள்), (உங்களில்) ஒவ்வொருவருக்கும், அவர் படைக்கப்பட்ட (நோக்கத்)தை அடைய வகை செய்யப்படும்”. **(புகாரி, முஸ்லிம்)**

மேலும் கூறினார்கள்,

"الْمُؤْمِنُ الْقَوِيُّ خَيْرٌ وَأَحَبُّ إِلَى اللَّهِ مِنْ الْمُؤْمِنِ الضَّعِيفِ وَفِي كُلٍّ خَيْرٌ احْرِصْ عَلَى مَا يَنْفَعُكَ وَاسْتَعِنْ بِاللَّهِ وَلَا تَعْجَزْ فَإِنْ أَصَابَكَ شَيْءٌ فَلَا تَقُلْ لَوْ أَنِّي فَعَلْتُ كَذَا وَكَذَا وَلَكِنْ قُلْ قَدَّرَ اللَّهُ وَمَا شَاءَ فَعَلَ فَإِنَّ لَوْ تَفْتَحُ عَمَلَ الشَّيْطَانِ" **[رواه مسلم]**

பலமான இறைநம்பிக்கையாளர், பலவீனமான நம்பிக்கையாளரைவிடச் சிறந்தவரும் அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமானவரும் ஆவார். ஆயினும், அனைவரிடமும்

நன்மை உள்ளது. உனக்குப் பயனளிப்பதையே நீ ஆசைப்படு. இறைவனிடம் உதவி தேடு. நீ தளர்ந்துவிடாதே. உனக்கு ஏதேனும் துன்பம் ஏற்படும்போது, "நான் (இப்படிச்) செய்திருந்தால் அப்படி அப்படி ஆயிருக்குமே!" என்று (அங்கலாய்த்துக்) கூறாதே. மாறாக, "அல்லாஹ்வின் விதிப்படி நடந்துவிட்டது. அவன் நாடியதைச் செய்துவிட்டான்" என்று சொல். ஏனெனில், “இவ்வாறு செய்திருந்தால்” என்று கூறுவது ஷைத்தானின் செயலுக்கே வழி வகுக்கும். **(முஸ்லிம்)**

இந்த ஹதீஸிலிருந்து நாம் தெரிந்து கொண்டது என்னவென்றால்:

அல்லாஹ் பலமான இறைநம்பிக்கையாளரை விரும்பக்கூடியவனாக இருக்கின்றான். அவர் தனக்கு பயனளிக்கும் விஷயங்களையே ஆசைப்படுவார், அல்லாஹ்விடத்திலேயே உதவி தேடுவார், காரணிகளை மேற்கொண்டு அவனையே சார்ந்திருப்பார். இவ்வாறு செய்தபின் அவர் விரும்பாத ஒன்று அவரை அடையும் என்றால், அதற்கு வருத்தப்படாமல் அல்லாஹ்வின் விதியை பொருந்திக் கொள்வார்.

அல்லாஹ் கூறுகிறான்,

**﴿وَعَسَىٰٓ أَن تَكْرَهُوا۟ شَيْـًٔا وَهُوَ خَيْرٌ لَّكُمْ ۖ وَعَسَىٰٓ أَن تُحِبُّوا۟ شَيْـًٔا وَهُوَ شَرٌّ لَّكُمْ ۗ وَٱللَّهُ يَعْلَمُ وَأَنتُمْ لَا تَعْلَمُونَ﴾**

*‘நீங்கள் ஒரு பொருளை வெறுக்கலாம்; ஆனால் அது உங்களுக்கு நன்மை பயப்பதாக இருக்கும்; ஒரு பொருளை நீங்கள் விரும்பலாம், ஆனால் அது உங்களுக்குத் தீமை பயப்பதாக இருக்கும். (இவற்றையெல்லாம்) அல்லாஹ் அறிவான், நீங்கள் அறியமாட்டீர்கள்’.* **(அல் குர்ஆன் 2:216)**



## II. சுன்னாவும், பித்’அத்தும் (மார்க்கத்தில் புதுமைகளை புகுத்துதல்)

**கேள்வி 1: மார்க்கத்தில் பித்’அத் (புதுமையை புகுத்துதல்) என்றால் என்ன?**

*பதில்:* எந்த விஷயங்களில் மார்க்கத்தின் ஆதாரம் நிறுவப்படவில்லையோ அதுவே மார்க்கத்தில் புகுத்தப்படும் பித்'அத்தாகும்.

இணைவைப்பாளர்களின் புதுமையான விஷயங்களை மறுத்தவாறு அல்லாஹ் இவ்வாறு கூறுகிறான்

﴿ أَمْ لَهُمْ شُرَكَٰٓؤُاْ شَرَعُواْ لَهُم مِّنَ ٱلدِّينِ مَا لَمْ يَأْذَنۢ بِهِ ٱللَّهُ ﴾

*‘ அல்லது: அல்லாஹ் அனுமதிக்காததை மார்க்கமாக்கிவைக்கக்கூடிய இணை(த்தெய்வங்)கள் அவர்களுக்கு இருக்கின்றனவா? .....’* (அல் குர்ஆன் 42:21)

இறைத்தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்:

"مَنْ أَحْدَثَ فِي أَمْرِنَا هَذَا مَا لَيْسَ مِنْهُ فَهُوَ رَدٌّ" **[متفق عليه]**

‘நம்முடைய இந்த (மார்க்க) விவகாரத்தில் அதில் இல்லாததைப் புதிதாக எவர் உண்டாக்குகிறாரோ அது நிராகரிக்கப்பட்டதாகும் (அது அல்லாஹ்வினால் ஏற்றுக் கொள்ளப்படாது. **(புகாரி, முஸ்லிம்)**

**கேள்வி 2: மார்க்கத்தில் நல்ல பித்’அத்துகள் உண்டா?**

*பதில்:* இல்லை. மார்க்கத்தில் நல்ல பித்’அத் என்று எதுவும் கிடையாது. இதற்கு ஆதாரம், அல்லாஹ்வுடைய குர்ஆன் வசனம்:

﴿ٱلۡيَوۡمَ أَكۡمَلۡتُ لَكُمۡ دِينَكُمۡ وَأَتۡمَمۡتُ عَلَيۡكُمۡ نِعۡمَتِي وَرَضِيتُ لَكُمُ ٱلۡإِسۡلَٰمَ دِينٗاۚ﴾

*'...இன்றைய தினம் உங்களுக்காக உங்கள் மார்க்கத்தை பரிபூர்ணமாக்கிவிட்டேன்; மேலும் நான் உங்கள் மீது என் அருட்கொடையைப் பூர்த்தியாக்கிவிட்டேன்; இன்னும் உங்களுக்காக நான் இஸ்லாம் மார்க்கத்தையே (இசைவானதாகத்) தேர்ந்தெடுத்துள்ளேன்; ....'* **(அல் குர்ஆன் 5:3)**

"إِيَّاكُمْ وَمُحْدَثَاتِ الْأُمُورِ، فَإِنَّ كُلَّ مُحْدَثَةٍ بِدْعَةٌ وَكُلُّ بِدْعَةٍ ضَلَالَةٌ وَكُلُّ ضَلَالَةٍ فِي النَّارِ". **[رواه أبو داود والترمذي وقال حسن صحيح]**

"நான் உங்களுக்கு (மார்க்கத்தின் பெயரால் தோற்றுவிக்கப்படும்) புதியவைகளை எச்சரிக்கின்றேன், ஒவ்வொரு புதியவைகளும் பித்'அத்தாகும், ஒவ்வொரு பித்'அத்தும் வழிகேடாகும், ஒவ்வொரு வழிகேடுகளும் நரகத்திற்கு இட்டுச் செல்லும்" என நபி ﷺ அவர்கள் கூறினார்கள். **(அபூ தாவூத், திர்மிதி)**

மார்க்கத்தின் பெயரால் தோற்றுவிக்கப்படும் பித்'அத்துக்களின் வகைகள்

1. (அல்-பித்'அத்துல் முகஃப்பிராஹ்): இஸ்லாமிய மார்க்கத்தை விட்டு வெளியேற்றக்கூடிய பித்'அத்துகள்: உதாரணமாக, இறந்தவர்கள் அல்லது மறைந்தவர்களை அழைப்பது அல்லது அவர்களிடம் உதவி தேடுவது. "(யா கௌஸ் மொஹ்யுதீன்!, மொஹ்யுதீன் ஆண்டகையே!) எனக்கு உதவுங்கள்" என்று அழைப்பது போன்றவை இவ்வகை பித்'அத்தில் அடங்கும்.

2. (அல்-பித்'அத்துல் முஹர்ரமஹ்): தடை செய்யப்பட்ட பித்அத்துகள்: உதாரணமாக, இறந்தவர்களிடம் வஸீலா தேடுதல்,

கப்ருகளை நோக்கி தொழுவது, அவைகளின் மீது கட்டிடம் கட்டியெழுப்புவது போன்றவையாகும்.

3. (அல்-பித்'அத்துல் மக்ரூஹாஹ்): வெறுக்கத்தக்க பித்அத்துகள்: உதாரணமாக, ஜூம்மா தொழுத பிறகு, ளுஹர் தொழுகையைத் தொழுதல், பாங்கு சொன்னபிறகு, நபி ﷺ அவர்களின் மீது உரக்க ஸலவாத் கூறுதல் போன்றவை.

நவீன கண்டுப்பிடிப்புகள் போன்ற உலகம் சார்ந்த விஷயங்கள் மார்க்கம் சார்ந்த பித்'அத்துகளில் வராது. நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

أَنْتُمْ أَعْلَمُ بِأَمْرِ دُنْيَاكُمْ [رواه مسلم]

உங்களின் உலக விவகாரங்களை நீங்களே நன்கறிந்தவர்களாக உள்ளீர்கள் **(முஸ்லிம்)**

**கேள்வி 3. இஸ்லாத்தில் 'சுன்னா ஹஸனா' எனும் அழகிய நடைமுறை இருக்கின்றதா?**

*பதில்:* ஆம், இஸ்லாத்தில் ஸதகாவைப் போன்று 'சுன்னா ஹஸனா' எனும் அழகிய நடைமுறை இருக்கின்றது.

مَنْ سَنَّ فِي الْإِسْلَامِ سُنَّةً حَسَنَةً فَلَهُ أَجْرُهَا وَأَجْرُ مَنْ عَمِلَ بِهَا بَعْدَهُ مِنْ غَيْرِ أَنْ يَنْقُصَ مِنْ أُجُورِهِمْ شَيْءٌ.. " [رواه مسلم]

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் இஸ்லாத்தில் (அதன் அடிப்படைக்கு முரண்படாத வகையில்) ஓர் அழகிய நடைமுறையை உருவாக்கி, அவருக்குப்பின் அந்த நடைமுறை செயல்படுத்தப்படுகிறதோ அதன்படி செயல்படுபவர்களின் நன்மை போன்றது அ(ந்த நடைமுறையை

உருவாக்கிய)வருக்கு உண்டு. அதற்காக அவர்களது நன்மையில் எதுவும் குறைந்துவிடாது. **(முஸ்லிம்)**

## கேள்வி 4: முஸ்லிம்கள் எப்போது வெற்றியாளர்களாவார்கள்?

*பதில்:* முஸ்லிம்கள் மீண்டும் தங்கள் வாழ்வில் குர்ஆனையும், சுன்னாவையும் நடைமுறைப்படுத்தி, தவ்ஹீத் எனும் ஏகத்துவத்தை (மக்களிடையே) பரப்பி, எல்லாவிதமான ஷிர்க்குகளையும் தவிர்த்து, தங்களுடைய எதிரிகளை தங்களிடம் உள்ள எல்லாவற்றையும் பயன்படுத்தி பலமுடன் எதிர்கொள்ளும்போது அவர்களுக்கு வெற்றி கிடைக்கும். அல்லாஹ் கூறுகிறான்:

﴿يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓا۟ إِن تَنصُرُوا۟ ٱللَّهَ يَنصُرْكُمْ وَيُثَبِّتْ أَقْدَامَكُمْ﴾

*‘ஈமான் கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு உதவி செய்தால், அவன் உங்களுக்கு உதவி செய்து உங்கள் பாதங்களையும் உறுதியாக்கி வைப்பான்.* **(அல் குர்ஆன் 47:7)**

மேலும் அல்லாஹ் கூறுகிறான்,

﴿وَعَدَ ٱللَّهُ ٱلَّذِينَ ءَامَنُوا۟ مِنكُمْ وَعَمِلُوا۟ ٱلصَّٰلِحَٰتِ لَيَسْتَخْلِفَنَّهُمْ فِى ٱلْأَرْضِ
كَمَا ٱسْتَخْلَفَ ٱلَّذِينَ مِن قَبْلِهِمْ وَلَيُمَكِّنَنَّ لَهُمْ دِينَهُمُ ٱلَّذِى ٱرْتَضَىٰ لَهُمْ
وَلَيُبَدِّلَنَّهُم مِّنۢ بَعْدِ خَوْفِهِمْ أَمْنًا يَعْبُدُونَنِى لَا يُشْرِكُونَ بِى شَيْـًٔا﴾

*உங்களில் எவர் ஈமான் கொண்டு (ஸாலிஹான) - நற்செயல்கள் புரிகிறார்களோ அவர்களை, அவர்களுக்கு முன்னிருந்தோரைப் பூமிக்கு ஆட்சியாளர்களாக்கியது போல், பூமிக்கு நிச்சயமாக ஆட்சியாளர்களாக்கி வைப்பதாகவும், இன்னும் அவன் அவர்களுக்காக பொருந்திக் கொண்ட மார்க்கத்தில் அவர்களை நிச்சயமாக நிலைப்படுத்துவதாகவும், அவர்களுடைய அச்சத்தைத் திட்டமாக அமைதியைக் கொண்டு மாற்றிவிடுவதாகவும்,*

*அல்லாஹ் வாக்களித்திருக்கிறான்; "அவர்கள் என்னோடு (எதையும், எவரையும்) இணைவைக்காது, அவர்கள் என்னையே வணங்குவார்கள்..."* **(அல் குர்ஆன் 24:55)**

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்,

"أَلَا إِنَّ الْقُوَّةَ اَلرَّمْيُ". **[رواه مسلم]**

வலிமை என்பது வில்வித்தை (Archery).



## 12. நன்மையை வேண்டி (இஸ்திகாரா)

நபி ﷺ அவர்கள் குர்ஆனுடைய சூராவை எங்களுக்குக் கற்றுக் கொடுப்பது போன்று எல்லா விஷயங்களிலும் நன்மையை நாடி அல்லாஹ்விடம் பிரார்த்திக்க வேண்டிய பிரார்த்தனையையும் கற்றுக் கொடுப்பார்கள்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் ஒரு காரியத்தைச் செய்ய வேண்டும் என நாடினால் ஃபர்ழு தொழுகையல்லாமல் இரண்டு ரக்அத் தொழுது கொள்ளட்டும். பிறகு அல்லாஹ்விடம் இப்படிப் பிரார்த்திக்கட்டும்:

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْتَخِيْرُكَ بِعِلْمِكَ وَأَسْتَقْدِرُكَ بِقُدْرَتِكَ وَأَسْأَلُكَ مِنْ فَضْلِكَ الْعَظِيْمِ فَإِنَّكَ تَقْدِرُ وَلَا أَقْدِرُ وَتَعْلَمُ وَلَا أَعْلَمُ وَأَنْتَ عَلَّامُ الْغُيُوْبِ اَللّٰهُمَّ إِنْ كُنْتَ تَعْلَمُ أَنَّ هٰذَا الْأَمْرَ

(தான் நாடும் விஷயத்தைக் குறிப்பிட வேண்டும்.)

خَيْرٌ لِّيْ فِيْ دِيْنِيْ وَمَعَاشِيْ وَعَاقِبَةِ أَمْرِيْ (عَاجِلِهِ وَآجِلِهِ) فَاقْدُرْهُ لِيْ وَيَسِّرْهُ لِيْ ثُمَّ بَارِكْ لِيْ فِيْهِ وَإِنْ كُنْتَ تَعْلَمُ أَنَّ هٰذَا الْأَمْرَ

(தான் நாடும் விஷயத்தை குறிப்பிட வேண்டும்.)

شَرٌّ لِّيْ فِيْ دِيْنِيْ وَمَعَاشِيْ وَعَاقِبَةِ أَمْرِيْ (عَاجِلِهِ وَآجِلِهِ) فَاصْرِفْهُ عَنِّيْ وَاصْرِفْنِيْ عَنْهُ وَاقْدُرْ لِيَ الْخَيْرَ حَيْثُ كَانَ ثُمَّ أَرْضِنِيْ بِهِ

*பொருள்:* அல்லாஹ்வே! உனது அறிவைக் கொண்டு உன்னிடம் நன்மையை கேட்கின்றேன்; உன் ஆற்றலைக் கொண்டு உன்னிடம்

ஆற்றலைக் கேட்கின்றேன்; உனது மகத்தான கிருபையிலிருந்து உன்னிடம் கேட்கின்றேன்; நிச்சயமாக நீ ஆற்றல் பெற்றவன்; நான் ஆற்றல் இல்லாதவன்; நீ அறிந்தவன்; நான் அறியாதவன்; மறைவானவை அனைத்தையும் நீ நன்கு அறிந்தவன்; அல்லாஹ்வே!! இந்தக் காரியம் (தனது தேவையை இங்கு குறிப்பிடவும்) எனக்கு எனது மார்க்கத்திலும், எனது வாழ்விலும், என் காரியத்தின் முடிவிலும் நன்மையாக அமையும் என நீ அறிந்திருந்தால் அதை எனக்கு விதி! அதை எனக்கு இலகுவாக்கித்தா! பின்பு அதிலே எனக்கு பரக்கத் செய்! இந்தக் காரியம் எனக்கு என்னுடைய மார்க்கத்திலும் எனது வாழ்விலும் எனது காரியத்தின் முடிவிலும் தீமை என்று நீ அறிந்திருந்தால் அதை என்னை விட்டு திருப்பிவிடு! என்னையும் அதை விட்டு திருப்பிவிடு! நன்மை எங்கிருப்பினும் அதையே எனக்கு விதித்துவிடு! பின்பு நான் அதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளும்படி செய்! **(ஸஹீஹுல் புகாரி)**

ஒருவர் தனது உடல் நலத்திற்காக மருந்தை அருந்துவதைப் போன்று இந்த தொழுகை மற்றும் துஆவை தனக்காக மேற்கொள்ள வேண்டும். எந்த ரப்பிடத்தில் இஸ்திகாரா மேற்கொள்கிறாரோ அவன் கண்டிப்பாக தனக்கு சிறந்ததின் பால் வழி காண்பிப்பான் என்று உறுதியாக நம்பவேண்டும்.



## ١3. நிவாரணம் பெற ஓதும் துஆ

1) உங்களது உடம்பில் வலி இருக்கும் இடத்தில் கை வைத்து, بِسْمِ اللهِ 'அல்லாஹ்வின் பெயரால்' என்று மூன்று முறை கூறுங்கள். பிறகு ஏழு முறை,

أَعُوْذُ بِاللهِ وَقُدْرَتِهِ مِنْ شَرِّ مَا أَجِدُ وَأُحَاذِرُ

"அல்லாஹ்வைக் கொண்டும், அவனது ஆற்றலைக் கொண்டும், நான் உணரும் தீங்கை விட்டும், நான் பயப்படும் தீங்கை விட்டும், அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன்'' என்று கூறுங்கள். **(முஸ்லிம்)**

2) ஆயிஷா ﵂ கூறினார்கள்:

நபி ﷺ அவர்கள் தம் துணைவியார் ஒருவருக்காக (நோயிலிருந்து) பாதுகாப்புக் கோரிவந்தார்கள். தம் வலக் கரத்தால் (வலியுண்டான இடத்தைப் பரிவுடன்) வருடிக் கொடுத்து,

اللَّهُمَّ رَبَّ النَّاسِ أَذْهِبِ الْبَاسَ، اشْفِهِ وَأَنْتَ الشَّافِي، لاَ شِفَاءَ إِلاَّ شِفَاؤُكَ، شِفَاءً لاَ يُغَادِرُ سَقَمًا

அல்லாஹும்ம ரப்பன்னாஸ்! அத்ஹிபில் பஃஸ், வஷ்ஃபிஹி. வ அன்த்தஷ் ஷாஃபி லா ஷிஃபாஅ இல்லா ஷிஃபாஉக. ஷிஃபாஅன் லா யுஃகாதிரு சகமன்' - என்று பிரார்த்தித்தார்கள்.

*பொருள்:* இறைவா! மக்களை இரட்சிப்பவனே! துன்பத்தைப் போக்கி இவருக்குக் குணமளித்திடுவாயாக! நீயே குணமளிப்பவன்.

உன் நிவாரணத்தைத் தவிர வேறு நிவாரணமில்லை. நோய் அறவே இல்லாதவாறு குணமளிப்பாயாக!) (புகாரி, முஸ்லிம்)

3) இப்னு அப்பாஸ் ﵄ அறிவித்தார்கள்: நபி ﷺ அவர்கள், ஹஸன் ﵁ மற்றும் ஹுஸைன் ﵁ ஆகியோருக்காக (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோரி வந்தார்கள்.

أَعُوذُ بِكَلِمَاتِ اللّٰهِ التَّامَّةِ مِنْ كُلِّ شَيْطَانٍ وَهَامَّةٍ، وَمِنْ كُلِّ عَيْنٍ لاَمَّةٍ

'அல்லாஹ்வின் முழுமையான (குணமளிக்கும்) சொற்களைக் கொண்டு ஒவ்வொரு ஷைத்தானிடமிருந்தும் நச்சுப் பிராணியிடமிருந்தும் தீய எண்ணத்துடன் தீண்டும் (பொறாமைக்) கண்ணிலிருந்தும் அவனிடம் பாதுகாப்புக் கோருகிறேன்' **(புகாரி)**

நோயாளியை நலம் விசாரிக்கும்போது (ஏழு முறை ஓத வேண்டும்)

أَسْأَلُ اللّٰهَ الْعَظِيْمَ رَبَّ الْعَرْشِ الْعَظِيْمِ أَنْ يَّشْفِيَكَ

மகத்தான அர்ஷின் அதிபதியான மகத்துவமிக்க அல்லாஹ்விடம் உன்னைக் குணப்படுத்த வேண்டுகிறேன். **(ஷாமிவுத் திர்மிதி)**

4) அபூசயீத் அல்குத்ரீ ﵁ அவர்கள் கூறியதாவது:

நபி ﷺ அவர்(கள் உடல் நலிவுற்றிருந்தபோது அவர்)களிடம் (வானவர்) ஜிப்ரீல் ﵇ அவர்கள் வந்து, "முஹம்மதே! உடல்நலம் பாதிக்கப்பட்டுள்ளதா?" என்று கேட்டார்கள். அதற்கு நபி ﷺ அவர்கள் "ஆம்" என்று பதிலளித்தார்கள். அப்போது,

بِاسْمِ اللّٰهِ أَرْقِيكَ مِنْ كُلِّ شَيْءٍ يُؤْذِيْكَ مِنْ شَرِّ كُلِّ نَفْسٍ أَوْ عَيْنٍ حَاسِدٍ اللّٰهُ يَشْفِيكَ بِاسْمِ اللّٰهِ أَرْقِيكَ.

"பிஸ்மில்லாஹி அர்கீக்க, மின் குல்லி ஷைஇன் யுஃதீக்க, மின் ஷர்ரி குல்லி நஃப்சின் அவ் அய்னின் ஹாசிதின், அல்லாஹு யஷ்ஃபீக்க, பிஸ்மில்லாஹி அர்கீக்க" என்று ஓதிப்பார்த்தார்கள்.

பொருள்: அல்லாஹ்வின் பெயரால் உமக்கு ஓதிப்பார்க்கிறேன். உமக்குத் தொல்லை தரும் அனைத்து அம்சங்களிலிருந்தும், பொறாமை கொள்ளக்கூடிய அனைவரின் அல்லது கண்களின் தீமையிலிருந்தும் உமக்கு அல்லாஹ் நிவாரணமளிப்பானாக. அல்லாஹ்வின் பெயரால் உமக்கு ஓதிப்பார்க்கிறேன். **(ஸஹீஹ் முஸ்லிம்)**

5) சூரத்துல் ஃபாத்திஹாவையும், குல் அஊது பிரப்பில் ஃபலக் மற்றும் குல் அஊது பிரப்பின் நாஸ் - யும் ஓதி அல்லாஹ் ஒருவனிடம் மட்டுமே நிவாரணத்தை தேடிட வேண்டும். மருந்து எடுப்பதோடு துஆவையும் இன்னும் ஏழைகளுக்கு தர்மத்தை வழங்குவதைக் கொண்டு இறைவனின் நாட்டத்துடன் நிவாரணத்தை அடையலாம்.



## 14. ஏற்றுக் கொள்ளப்படும் துஆக்கள்

1. அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்.

عَنِ النَّبِيِّ صلى الله عليه وسلم قَالَ مَنْ تَعَارَّ مِنَ اللَّيْلِ فَقَالَ

لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ، لَهُ الْمُلْكُ، وَلَهُ الْحَمْدُ، وَهُوَ عَلَى كُلِّ

شَيْءٍ قَدِيرٌ. الْحَمْدُ لِلَّهِ، وَسُبْحَانَ اللَّهِ، وَلاَ إِلَهَ إِلاَّ اللَّهُ، وَاللَّهُ أَكْبَرُ، وَلاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ. ثُمَّ قَالَ اللَّهُمَّ اغْفِرْ لِي. أَوْ دَعَا اسْتُجِيْبَ، فَإِنْ تَوَضَّأَ وَصَلَّى قُبِلَتْ صَلاَتُهُ.

'யார் இரவில் விழித்து வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாரும் இல்லை. அவன் ஏகன்; அவனுக்கு நிகரானவர் இல்லை; ஆட்சியும் அவனுக்குரியது; புகழும் அவனுக்குரியது; அவன் அனைத்து பொருட்களின் மீதும் ஆற்றலுள்ளவன். அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும். அவன் தூயவன்; அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் யாரும் இல்லை. அவன் மிகப்பெரியவன் நன்மை செய்யும் ஆற்றலும் தீமையில் இருந்து விடுபடுவதும் அவனைக் கொண்டே இருக்கிறது என்று கூறிவிட்டு இறைவா! என்னை மன்னித்துவிடு என்றோ, வேறு பிரார்த்தனைகளையோ செய்தால் அவை அங்கீகரிக்கப்படும். உளூச் செய்து தொழுதால் அத்தொழுகை ஒப்புக் கொள்ளப்படும். என உபதா இப்னு ஸாமித் ﵁ அறிவித்தார். **(ஸஹீஹ் புகாரி)**

2. ஒரு முறை அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் ஒரு நபித்தோழர் இவ்வாறு கூறுவதை கேட்டார்கள்:

اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ أَنِّي أَشْهَدُ أَنَّكَ أَنْتَ اللَّهُ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ الأَحَدُ الصَّمَدُ الَّذِي لَمْ يَلِدْ وَلَمْ يُولَدْ وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا أَحَدٌ.

அல்லாஹும்ம இன்னி அஸ்அலுக்க அன்னி அஷ்ஹது அன்னக அன்தல்லாஹு லா இலாஹ இல்லா அன்த்த அல்-அஹது அஸ்-ஸமது அல்லதி லம் யலித் வலம் யூலத், வலம் யகுல்லஹு குஃபுவன் அஹத்.

அல்லாஹ்வே... நிச்சயமாக நீ தான் அல்லாஹ். உன்னைத்தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை; நீ தனித்தவன்; முழுமையானவன்; யாருடைய தேவையுமற்றவன்; நீ யாரையும் பெற்றெடுக்கவுமில்லை; யாருக்கும் பிறந்தவனுமில்லை; உனக்கு நிகராக எதுவும் இல்லை என்று நான் சாட்சி கூறி உன்னிடம் வேண்டுகிறேன்.

அப்போது நபி ﷺ அவர்கள் "அல்லாஹ்விடத்தில் எந்த பெயரைக் கொண்டு கேட்கப்பட்டால் அவன் வழங்குவானோ இன்னும் எதைக் கொண்டு துஆ செய்தால் அதற்கு பதில் அளிப்பானோ, அதையே நீர் கேட்டீர்" என்று கூறினார்கள். **(ஸுனன் அபூதாவூது)**

3. மீனின் வயிற்றில் இருந்த யூனுஸ் நபி கேட்ட துஆ:

﴿لَّآ إِلَٰهَ إِلَّآ أَنتَ سُبۡحَٰنَكَ إِنِّي كُنتُ مِنَ ٱلظَّٰلِمِينَ﴾

*"உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய நாயன் யாருமில்லை; நீ மிகவும் தூய்மையானவன்; நிச்சயமாக நான் அநியாயக்காரர்களில் ஒருவனாகிவிட்டேன்" என்றுபிரார்த்தித்தார்.* **(அல் குர்ஆன் 21:87)**

ஓர் அடியான் இந்த துஆவைக் கொண்டு ஏதேனும் துஆச் செய்தால், நிச்சயமாக அல்லாஹ் அதற்கு பதிலலிப்பான். (அஹ்மது)

4. நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கவலை, துன்பம் ஏற்பட்டால் இந்த துஆவைக் கூறுவார்கள்:

يَا حَيُّ يَاقَيُّوْمُ بِرَحْمَتِكَ أَسْتَغِيْثُ

என்றும் உயிரோடு இருப்பவனே! நிலையானவனே! உனது கருணை, அன்பைக் கொண்டு உன்னிடம் உதவி கேட்கிறேன். **(திர்மிதீ)**



